செம்பொன்னைப்பவளத்தைத்திரளுமுத்தைத்திங்களைஞாயிறைத்தீயைநீரை
அம்பொன்னை யாவடுதண்டுறையுண்மேயவரனடியேயடிநாயேனடைந்துய்ந்தேனே

மின்னானை மின்னிடைச்சேருருமினானை வெண்முகிலாயெழுந்துமழைபொழிவான்றனைத், தன்னானைத் தன்னொப்பாரில்லாதானைத் தாயாகிப்பல்லுயிர்க்கோர் தந்தையாகி, என்னானை யெந்தைபெருமான்றன்னை யிருநிலமுமண்டமுமாயச் செக்கர்வானே, அன்னானை யாவடுதண்டுறையுண்மேயவரனடியேயடிநாயேனடைந்துய்ந்தேனே. (௨)

பத்தர்கள்சித்தத்தே பாவித்தானைப் பவளக்கொழுந்தினை மாணிக்கத்தின, தொத்தினைத் தூநெறியாய்நின்றான்றன்னைச் சொல்லுவார்சொற்பொருளின்றோற்றமாகி, வித்தினை முளைக்கிளையைவேரைச்சீரைவினைவயத்தின்றன்சார்வைவெய்யதீர்க்கும், அத்தனை யாவடுதண்டுறையுண்மேயவரனடியேயடிநாயேனடைந்துய்ந்தேனே. (௩)

பேணியநற்பிறைதவழ்செஞ்சடையினானைப்பித்தராமடியார்க்கு முத்திகாட்டும், ஏணியையிடர்க்கடலுட்சுழிக்கப்பட்டிங்கிளைக்கின்றேற்கக்கரைக்கேயேற வாங்குந், தோணியைத்தொண்டனேன்றூயசோதிச்சுலாவெண்குழையானைச் சுடர்பொற்காசின், ஆணியையாவடுதண்டுறையுண்மேய வரனடியேயடிநாயேனடைந்துய்ந்தேனே. (௪)

ஒருமணியையுலகுக்கோருறுதிதன்னை யுதயத்தினுச்சியையுருமானானைப், பருமணியைப்பாலோடஞ்சாடினானைப் பவித்திரனைப்பசுபதியைப்பவளக்குன்றைத், திருமணியைத்தித்திப்பைத்தேனதாகித்தீங்கரும்பினின்சுவையைத்திகழுஞ்சோதி, அருமணியையாவடுதண்டுறையுண்மேயவரனடியேயடிநாயேனடைந்துய்ந்தேனே. (௫)

ஏற்றானையெண்டோளுடையான்றன்னை யெல்லிநடமாடவல்லான்றன்னைக், கூற்றானைக்கூற்றமுதைத்தான்றன்னைக்குரைகடல்வாய்நஞ்சுண்டகண்டன்றன்னை, நீற்றானைநீளரவொன்றார்த்தான்றன்னைநீண்டசடைமுடிமேனீராகங்கை, ஆற்றானையாவடுதண்டுறையுண்மேயவரனடியேயடிநாயேனடைந்துய்ந்தேனே. (௬)

கைம்மானமதகளிற்றையுரித்தான்றன்னைக்கடல்வரைவானாகாசமானான்றன்னைச்
செம்மானப்பவளத்தைத்திகழுமுத்தைத்திங்களைஞாயிறைத்தீயானானை
எம்மானையென்மனமேகோயிலாகவிருந்தானையென்புருகுமடியார்தங்கள்
அம்மானையாவடுதண்டுறையுண்மேயவரனடியேயடிநாயேனடைந்துய்ந்தேனே.

மெய்யானைப்பொய்யரொடுவிரவாதானை வெள்ளடையைத்தண்ணிழலை வெந்தீயேந்துங், கையானைக்காமனுடல்வேவக்காய்ந்தகண்ணானைக்கண்மூன்றுடையான்றன்னைப், பையாடரவமதியுடனேவைத்தசடையானைப்பாய்புலித்தோலுடையான்றன்னை, ஐயானையாவடுதண்டுறையுண்மேயவரனடியேயடிநாயேனடைந்துய்ந்தேனே. (அ)

வேண்டாமைவேண்டுவதுமில்லான்றன்னைவிசயனைமுன்னசைவித்தவேடன்றன்னைத், தூண்டாமைச்சுடர்விடுநற்சோதியானைச்சூலப்படையானைக்காலன்வாணாண், மாண்டோடவுதைசெய்தமைந்தன்றன்னை மண்ணவரும்விண்

ணவருமவணங்கியேத்தும,' ஆண்டானையாவடுதண்டுறையுண்மேயவரனடியே யடிநாயேனடைந்துய்ந்தேனே. (க)

பந்தணவுமெலவிரலாள்பாகன்றன்னைப்பாடலோடாடலவபயின்றான்றன்னைக் கொந்தணவுநறுங்கொன்றைமாலையானைக்கோலமாநீலமிடறறான்றன்னைச செந்தமிழோடாரியனைச்சீரியானைத்திருமாற்பேற்புரிவெண்ணூறிகழப்பூண்ட அந்தணனையாவடுதண்டுறையுண்மேயவரனடியேயடிநாயேனடைந்துய்ந்தேனே.

தரித்தானைத்தண்கடனஞ்சுண்டான்றன்னைத் தக்கன்றன்பெருவேள்வித காத்தான்றன்னைப, பிரித்தானைப்பிறைதவழ்செஞ்சடையினானைப பெருவலியா ன்மலையெடுத்தவரக்கன்றன்னை, நெரித்தானைநேரிழையாள்பாகத்தானை நீசனே னுடலுறுநோயானதீர, அரித்தானையாவடுதண்டுறையுண்மேயவரனடியேயடிநா யேனடைந்துய்ந்தேனே. (கக)

திருச்சிற்றம்பலம்

---

### திருஆவடுதுறை - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

திருவேயென்செல்வமேதேனேவானோர் செழுஞ்சுடரே செழுஞ்சுடர்நற சோதிமிக்க, உருவேயென்னுறவேயென் னூனேயூனினுள்ளமேயுள்ளத்தினுள ளேநின்ற,கருவேயென்கற்பகமேகண்ணேகண்ணிற்கருமணியேமணியாடுபாவா ய்காவாய், அருவாயவல்வினைநோயடையாவண்ணமாவடுதண்டுறையுறையுமமர ரேறே. (க)

மாற்றேனெழுத்தஞ்சுமென்றனாவின்மறவேன்றிருவருள்கள்வஞ்சநெஞ்சி, னேற்றேன்பிறதெய்வமெண்ணாநாயே னெம்பெருமான்றிருவடியே யெண்ணி னல்லால்,மேற்றானீசெய்வனகள்செய்யக்கண்டுவேதனைக்கேயிடங்கொடுத்துநா ளுநாளும, ஆற்றேனடியேனையஞ்சலென்னாயாவடுதண்டுறையுறையுமமரரேறே.

வரையார்மடமங்கைபங்காகங்கைமணவாளாவார்சடையாய்நின்றனாம உரையாவுயிர்போகப்பெறுவேனாகிலுறுநோய்வந்தெத்தனையுமுற்றாலென்னே கரையாநினைந்துருகிக்கண்ணீர்மல்கிக்காதலித்துநின்கழலேயேத்துமன்பாக் கரையாவடியேனையஞ்சலென்னாயாவடுதண்டுறையுறையுமமரரேறே. (௩)

சிலைத்தார்திரிபுரங்கடீயில்வேவச்சிலைவளைவித்துமையவளையஞ்சநோக்கிக கலித்தாங்கிருமபிடிமேற்கைவைத்தோடுங்களிறுரித்தகங்காளாவெங்கள்கோவே நிலைத்தாரவர்தமக்கேபொறையாய்நாளுநில்லாவுயிரோம்புநீசனேனான் அலுத்தேனடியேனையஞ்சலென்னாயாவடுதண்டுறையுறையுமமரரேறே. (௪)

நறுமாமலர்கொய்துநீரின்மூழ்கிநாடோறுநின்கழலேயேத்திவாழ்த்தித்,துற வாததுன்பந்துறந்தேன்றன்னைச்சூழலகிலூழ்வினைவந்துற்றாலென்னே,உறவா கிவானவர்கள்முற்றும்வேண்டவொலிதிரை நீர்க்கடனஞ்சுண்டுய்யக்கொண்ட, அறவாவடியேனையஞ்சலென்னாயாவடுதண்டுறையுறையுமமரரேறே. (௫)

கோணாரணனங்கந் தோண்மேற்கொண்டு கொழுமலரான்றன்சிரத்தைக் கையிலேந்திக், காணார்களிற்றுரிவைப்போர்வைமூடிக்கங்காளவேடராயெங்குஞ் செல்வீர், நாணாருமக்காளாய்வினைக்கேடனே னல்வினையுந்தீவினையுமெல்லாமுன் னே,ஆணையடியேனையஞ்சலென்னாயாவடுதண்டுறையுறையுமமரரேறே. (௬)

உழைப்புரித்தமானுரி தோலாடையானே யுமையவடம்பெருமானேயிமை
போரேறே,கழையிறுத்தகருங்கடனஞ்சுண்டகண்டாகயிலாயமலையானே யுன்
பாலன்பா, பிழைபொறுத்தியெனபதுவும பெரியோயநின்றன்கடனன்றேபேரரு
ளுன்பாலதன்றே,அழையுறுத்துமாமயில்களாடுஞ்சோலையாவடுதண்டுறையுறை
யுமமரரேறே. (௭)

உலந்தார்தலைகலனென்றேந்தினானேருலகமபலிதிரிவாயுன்பாலன்பு
கலந்தாரமனங்கவருங்காதலானேகனலாடுங்கையவனேயையாமெய்யே
மலர்ந்தாங்குயிர்பபிறவிமாயக்காயமயக்குள்ளேவிழுந்தழுந்திநாளுநாளும
அலந்தேனடியேனையஞ்சலென்னாயாவடுதண்டுறையுறையுமமரரேறே. (௮)

பலலார்ந்தவெண்டலைகையிலேந்திபபசுவேறியூரூரன்பலிகொள்வானே
கலலார்தமலைமகளுநீயுமெலலாங்கரிகாட்டிலாட்டுகந்தீர்கருதீராகில் [றுக்
எலலாருமென்றனையிகழவே போலு மேழையமண்குண்டாசாக்கியாகளோன்
கலலாதாதிறத்தொழிந்தேனஞ்சலென்னாயாவடுதண்டுறையுறையுமமரரேறே.

துறந்தார்தந்தூநெறிக்கட்சென்றேனலலேன் றுணைமாலைசூட்டநான்றூ
யேனலலேன, பிறந்தேனின்றிருவருளேபேசினல்லாற பேசாதநாளெலலாமபி
றவாநாளே, செறிந்தாரமதிலிலங்கைக்கோமான்றன்னைச்செறுவரைக்கீழடர்த்
தருளிச்செய்கையெல்லாம, அறிந்தேனடியேனையஞ்சலென்னாயாவடுதண்டுறை
யுறையுமமரரேறே (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவலிவலம்-திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம.

நல்லானகாணுன்மறைகளாயினன்காணமபனகாணணுகாதாபுரமூன்றெ
ய்த, விலலானகாண்விண்ணவாககுமேலானன்காண்மெலலியலாள்பாகன்காண்
வேதவேள்விச,சொலலானகாண் சுடாமூன்றுமாயினன்காண் டொண்டாகிபப
ணிவாாக்குத்தொலலவானீய, வலலாண்காண்வானவாகள்வணங்கியேத்துமவலிவ
லததான்காணவனெனமனத்துளானே. (௧)

ஊனவன்காணுடறனக்கோருயிரானன்காணுள்ளவன்காணிலலவன்கா
ணுமையாட்கென்றுந், தேனவன்காண்டிருவவனகாண்டிசையானன்காண்டூ
ததன்காண்பாாததன்றனபணியைக்கண்ட,கானவன்காண்கடலவன்காண்மலை
யானன்காண்களியானையீருரிவைகதறபபோாத்த,வானவன்காண்வானவர்கள்வ
ணங்கியேத்துமவலிவலததான்காணவனென்மனத்துளானே. (௨)

ஏயவன்காணெலலாக்குமியல்பானன்காணின்பன்காண்டுன்பங்களிலலா
தான்காண், தாயவன்காணுலகுக்கோர்தன்னொப்பில்லாததத்துவன்காணுத்த
மன்காண்டானேயெங்கும, ஆயவன்காணண்டத்துக்கப்பாலான்காணகங்குழை
ந்துமெய்வருந்தியழுவார்தங்கள், வாயவன்காண்வானவாகள்வணங்கியேத்தும
வலிவலத்தான்காணவனென்மனத்துளானே. (௩)

உய்த்தவன்காணுடறனக்கோருயிரானன்காணோங்காரத்தொருவன்காணு
லகுக்கெலலாம,வித்தவனகாண்விண்பொழியுமழையானன்காண்வினைவலன்கா
ண்விரும்பாதாரநெஞ்சத்தென்றும், பொய்த்தவன்காண்பொழிலேழுந் தாங்கி

னான்காண்புனலோடுவளாமதியும்பாம்புஞ்சென்னி, வைத்தவன்காண்வானவர்கள்வணங்கியேத்துமவலிவலந்தான்காணவனென்மனத்துளானே. (௪)

கூற்றவன்காண்குணமவன்காண்குறியானான்காண் குன்றங்களனைத்துங்காண்கோலமாய, நீற்றவன்காணிழலவன்கா ணெருப்பானான்காணிமிர்புன்சடைமுடிமேனீராகங்கை, ஏற்றவன்காணேழுலகுமாயினான்காணிமைப்பளவிற்காமனைமுன்பொடியாய்வீழ, மாற்றவன்காண்வானவர்கள்வணங்கியேத்துமவலிவலந்தான்காணவனென்மனத்துளானே. (௫)

நிலையவன்காண்டோற்றவன்காணிறையானான்கா ணீரவன்காண்பாரவன்காணூர்மூன்றெய்த, சிலையவன்காண்செய்யவாய்க்கரியகூந்தற்றேன்மொழியையொருபாகஞ்சேர்த்தினான்காண், கலையவன்காண்காற்றவன்காண்காலன்வீழக்கறுத்தவன்காண்கயிலாயமென்னுந்தெய்வ, மலையவன்காண்வானவர்கள்வணங்கியேத்துமவலிவலந்தான்காணவனென்மனத்துளானே. (௬)

பெண்ணவன்காணாணவன்காண்பெரியோர்க்கென்றும் பெரியவன்காணரியவன்காணயனானான்காண், எண்ணவன்காணெழுத்தவன்காணின்பக்கேள்வியிசையவன்காணியலவன்காணெல்லாங்காணுங், கண்ணவன்காண்கருத்தவன்காண்கழிந்தோர்செல்லுங்கதியவன்காண்மதியவன்காண்கடலேழ்சூழ்ந்த, மண்ணவன்காண் வானவர்கள்வணங்கியேத்தும வலிவலந்தான்காணவனென்மனத்துளானே (௭)

முன்னவன்காண்பின்னவன்காண்மூவாமேனி முதலவன்காண்முடியவன்காண்மூன்றுசோதி, அன்னவன்காணடியார்க்குமண்டர்தார்க்குமணியவன்காண்சேயவன்காணளவில்சோதி, மின்னவன்காணுருமவன்காண்டிருமால்பாகம் வேண்டினான்காணீண்டுபுனற்கங்கைக்கென்று, மன்னவன்காண்வானவர்கள்வணங்கியேத்தும வலிவலந்தான்காணவனென்மனத்துளானே. (௮)

நெதியவன்காண்யாவர்க்குநினையவொண்ணாநீதியன்காண்வேதியன்காணினைவார்க்கென்றுங், கதியவன்காண்காரவன்காண்கனலானான்காண்காலங்களூழியாய்க்கலந்துநின்ற, பதியவன்காண்பழமவன்காணிரதந்தான்காண்பாம்போடு திங்கள்பயில்வைத்த, மதியவன்காண்வானவர்கள்வணங்கியேத்துமவலிவலத்தான்காணவனென்மனத்துளானே. (௯)

பங்கயத்தின்மேலானும்பாலனாகி யுலகளந்தபடியானும் பரவிக்காணக், கங்கைவைத்தசென்னியராயளக்கமாட்டா வனலவன்காணலைகடல்சூழிலங்கைவேந்தன், கொங்கலர்ந்தமுடிநெரியவிரலாலூன்றுங்குழகன்காணழகன்காண்கோலமாய, மங்கையர்க்கோர்கூறன்காண்வானோரேத்துமவலிவலந்தான்காணவனென்மனத்துளானே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

இந்தத்தலம் சோழநாட்டிலுள்ளது.
சுவாமிபெயர் மனத்துணைநாதர்-தேவியார்-மாழையங்கண்ணியம்மை.
ஆக பதிகம்-௪௮.

---

## திருக்கோகரணம் - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

சந்திரனுந்தண்புனலுஞ்சந்தித்தான்காண்டாழ்சடையான்காண்சார்ந்தார்க்கமுதானான்கா, ணந்தரத்திலசுரர்புரமூன்றட்டான்காணவ்வுருவிலவ்வுருவமாயி

னான்காண், பந்தரத்துநான்மறைகள்பாடினான்காண்பலபலவும்பாணிபயில
கின்றான்காண், மந்திரத்துமறைப்பொருளுமாயினான்காண்மாகடலசூழ்கோ
கரணமன்னினானே. (௧)

தந்தவத்தானற்றலையைத்தாங்கினான்காண்சாரணன்காண்சார்ந்தார்க
கின்னமுதானான்காண், கொந்தத்தன்காண்கெடிலவீரட்டன்காண்கேடிலிகா
ண்கெடுப்பார்மற்றில்லாதான்காண், வெந்தொத்தநீறுமெய்பூசினான்காண்வீர
ன்காண்வியன்கயிலைமேவினான்காண், வந்தொத்தநெடுமாறகுமறிவொணான்
காண்மாகடலசூழ்கோகரணமன்னினானே. (௨)

தன்னுருவமாருக்குந்தாக்காதான்காண் டாழ்சடையெம்பெருமான்கா
ண்டக்கார்க்குள்ளப் பொன்னுருவச்சோதிபுனலாடினான்காண்புராணன்கா
ண்பூதங்களாயினான்காண், மின்னுருவநுண்ணிடையாள்பாகத்தான்காண்வே
ழத்துரிவெருவப்போர்த்தான்றான்காண், மன்னுருவாய்மாமறைகளோதினா
ன்காண்மாகடலசூழ்கோகரணமன்னினானே. (௩)

ஆறேறுசெஞ்சடையெம்மாரூரன்கா ணனபன்காணணிபழனமேயான
ன்றான்காண், நீறேறிதிகழுமேனியான்காணிருபன்காணிகரொன்றுமில்லா
தான்காண், கூறேறுகொடுமழுவாட்படையினான்காண்கொக்கரையன்காண
குழுநறபூதத்தான்காண், மாறாயமதில்மூன்றுமாயவித்தான்காண்மாகடல்சூழ்
கோகரணமன்னினானே. (௪)

சென்றச்சிலைவாங்கிச்சேவித்தான்காணடிரியம்பகன்காணடிரியும்புரங்க
ண்மூன்றும், பொன்றப்பொடியாகநோக்கினான்காண்பூதன்காண்பூதப்படை
யாளிகா, ணன்றப்பொழுதேயருள்செய்தான்காணனலாடிகாணடியார்க்கமு
தானான்காண், மன்றன்மணங்கமழுமவார்சடையான்காண்மாகடலசூழ்கோக
ரணமன்னினானே. (௫)

பிறையோடுபெண்ணொருபாலவைத்தான்றான்காண பேரவன்காண்பிற
ப்பொன்றுமில்லாதான்காண், கறையோடுமணிமிடற்றுக்காபாலிகாணகட்ட
ங்கன்காணகையிறகபாலமேந்திப், பறையோடுபலகீதம்பாடினான்காணாடினா
ன்காணடாணியாகின்று, மறையோடுமாகீதங்கேட்டான்றான்காணமாகடல
சூழ்கோகரணமன்னினானே. (௬)

மின்னளந்தமேன்முகட்டின்மேலுற்றான்காண் விண்ணவர்தம்பெருமா
ன்காண்மேவிலெங்கு, முன்னளந்தமூவர்க்குமுதலானான்காணமூவிலைவேற்
சூலத்தெங்கோலத்தான்காண், எண்ணளந்தென்சிந்தையேமேவினான்காணே
வலன்காணிமையோர்களேத்தநின்று, மண்ணளந்தமாலறியர்மாயத்தான்கா
ண்மாகடலசூழ்கோகரணமன்னினானே. (௭)

பின்னுசடைமேற்பிறைசூடினான்காண பேரருளன்காணபிறப்பொன்றி
ல்லாதான்காண, முன்னியுலகுக்குமுன்னானான்காணமூவெயிலுஞ்செற்றுகந்
தமுதல்வன்றான்காண, இன்னவுருவென்றறிவொண்ணாதான்றான்காணேழ்கட
லுமேழுலகுமாயினான்காண, மன்னுமடந்தையோர்பாகத்தான்காண்மாகட
லசூழ்கோகரணமன்னினானே. (௮)

வெட்டவெடித்தார்க்கோர்வெவ்வழலன்காணவீரன்காண்வீரட்டமேவி
னான்காண், பொட்டவனங்கனையுநோக்கினான்காண்பூதன்காணபூதப்படையி

ளுனகாண், கட்டக்கடுவினைகள்காத்தாள்வான்காணகணடனகாணவண்டுணட கொனறையான்காண, வட்டமதிபபாகஞ்சூடிளுனகாணமாகடலசூழ்கோகரணமனனிளுனே. (கூ)

கையாற்கயிலையெடுத்தானறன்னைக் காலவிரலாற்றேறுணெரியவூன்றிளுன்காண், மெய்யினரமபிசையாற்கேட்பித்தாற்குமீணடேயவற்கருள்கணலகிளுனகாண, பொய்யர்மனததுபபுறமபாவானகாணபோராபபடையானகாண பொருவாரிலலாதானகாண, மைகொணமணிமிடறறுவாசடையானகாண மாகடலசூழ்கோகரணமன்னிளுனே. (கo)

திருச்சிற்றம்பலம்.

துளுவதேசததிலுள்ள ... தேசத்தில் இது ஒரேதலம்.

சுவாமிபெயர் - ...ர், தேவியார் - கோகரணநாயகியம்மை.



திருவீழிமிழலை - திருத்தாண்டகம்.

திருச்சிற்றமபலம்.

போரானையீருரிவைபபோாவையானைபபுலியதளேயுடையானடபோற்றிளுனைப, பாரானைமதியானைபபகலாளுனைபபலலுயிராய்நெடுவெளியாய்ப்பரந்துநின்ற, நீரானைககாற்றுனைத்தீயாளுனைநினையாதாரபுரமெரியநினைநததெய்வத்தேரானைத்திருவீழிமிழலையானைசசேராதார தீநெறிககேசோகின்றுரே.

சவநதாங்குமயானததுச்சாமபலெனபு தலையோடுமயிாக்கயிறுதரித்தான்றனைப, பவநதாங்குபாசுபதவேடததானைபபணடமராகொணடுகநதவேள்வியெலலாங், கவாநதானைக்கசசியேகமபனறனைககழலடைநதானமேற்கறுததகாலனவீழச, சிவநதானைததிருவீழிமிழலையானைச சேராதாாதீநெறிககேசோகின்றுரே. (உ)

அன்றுலின்கீழிருநதங்கறஞ்சொனளுனை யகததியனையுகபபானையயனமாறேட, நின்றுனைக்கிடநதகடனஞ்சுணடானைநேரிழையைக்கலநதிருநதேபுலன்களைநதும, வென்றுனைமீயச்சூாமேவிளுனைமெலலியலாடவத்தினிறையளக்கலுற்றுச், சென்றுனைத்திருவீழிமிழலையானைச்சேராதாா தீநெறிக்கேசோகின்றுரோ. (ங)

தூயானைச்சுடர்ப்பவளச்சோதியானைத்தோன்றியவெவ்வுயிாக்குநதுணையாய்நினற, தாயானைச்சக்கரமாற்கீநதானறனைச் சஙகரனைச்சநதோகசாமமோதும, வாயானைமநதிரிபபாாமனத்துளானைவஞசனையாலஞ்செழுத்துமவழுத்துவாாக்குச், சேயானைததிருவீழிமிழலையானைசசேராதார் தீநெறிக்கேசோகின்றுரே. (ச)

நற்றவத்தினல்லானைத்தீதாய்வநதநஞ்சமுதுசெய்தானையமுதமுணட மற்றமரருலநதாலுமுலவாதானைவருகாலஞ்செலகாலமவநதகாலம[ற்றேன்றச் உற்றவத்தையுணாநதாருமுணரலாகா வொருசுடரையிருவிசுமபினூாமுனசெற்றவனைததிருவீழிமிழலையானைச்சேராதாா தீநெறிக்கேசோகின்றுரே. ()

மைவானமிடற்றுனையவ்வான்மினபோல வளாசடைமேன்மதியானைமழையாயெங்குமம், பெய்வானைப்பிச்சாடலாடுவானைப்பிலவாயபேய்க்கணஙகளாாக்கசசூலம, பொய்வானைபபொய்யிலாமெய்யனறனைபபூதலமுமணடல

முழம்பொருந்துமவாழ்க்கை, செய்வானைத்திருவீழிமிழலையானைச்சேராதார் தீ
நெறிக்கேசேர்கின்றாரே. (௬)

மிக்கானைக்குறைந்தடைந்தார்மேவலானைவெவ்வேறாயிருமூன்றுசமயமா
கிப், புக்கானையெப்பொருட்குமபொதுவானானைப்பொனனுலகத்தவர்போற்
றும்பொருளுக்கெல்லாந், தக்கானைத்தானன்றிவேறொன்றில்லாத்தத்துவனை
த்தடவரையைநடுவுசெய்த, திக்கானைத்திருவீழிமிழலையானைச்சேராதார்தீநெ
றிக்கேசேர்கின்றாரே. (௭)

வானவர்கோனன்றோளிறுத்தமைந்தனறனைவளைகுளமுமமறைக்காடுமம
ன்னினானை, யூனவனையுயிரவனையொருநாட்பார்த்தனுயர்தவத்தினிலையறியலுற
றுச்சென்ற, கானவனைக்கயிலாயமேவினானைக்கங்கைசேர்சடையானைக்கலந்
தார்க்கென்றுந், தேனவனைத்திருவீழிமிழலையானைச்சேராதார்தீநெறிக்கே
சேர்கின்றாரே. (௮)

பரத்தானையிப்பக்கம்பலவானானைப் பசுபதியைப்பத்தர்க்கு முத்திகாட்
டும், வரத்தானைவணங்குவார்மனத்துள்ளானைமாருதமாலெரிமூன்றுவாயம்பீ
க்கானை, சரந்தானைச்சலந்தையுந்தன்றாட்கீழ்வைத்ததப்போதனைச்சடாமகு
டத்தணிந்தபைங்கட், சிரத்தானைத்திருவீழிமிழலையானைச்சேராதார்தீநெறிக
கேசேர்கின்றாரே. (௯)

அறுத்தானையயன்றலைகளஞ்சிலொன்றையஞ்சாதேவரையெடுத்தவரக
கன்றோள்க, ளிறுத்தானையெழுநரம்பினிசைகேட்டானையிந்துவினைத்தேய்த்
தானையிரவிதன்பற், பறித்தானைப்பகீரதற்காவானோர்வேண்டப்பரந்திழியும
புனற்கங்கைபனிபோலாக்கச்,செறுத்தானைத்திருவீழிமிழலையானைச்சேராதா
தீநெறிக்கேசேர்கின்றாரே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவீழிமிழலை-திருத்தாண்டகம்,

திருச்சிற்றம்பலம்.

கயிலாயமலையுள்ளார்காரோணத்தார்கந்தமாதனத்துள்ளார்காளத்தியார்
மயிலாடுதுறையுள்ளார்மாகாளத்தார்வக்கரையார்சக்கரமாற்கீந்தார்வாய்ந்த
அயிலவாய்சூலமுங்காபாலமுமமருந்திருக்கரத்தாரானேறி
வெயிலாயசோதிவிளங்குநீற்றார்வீழிமிழலையேமேவினாரே. (௧)

பூதிபணிபொன்னிறத்தார்பூணநூலார்பொங்கரவார்சங்கரர்வெண்குழையோர்கா
கேதிசரமேவினார்கேதாரத்தார்கெடிலவடவதிகைவீரட்டத்தார் [தா
மாதுபரந்தீததெனனையாட்கொண்டார்மழபாடிமேயமணவாளனார்
வேதிகுடியுள்ளார்மீயச்சூரார்வீழிமிழலையேமேவினாரே. (௨)

அண்ணாமலையமர்ந்தாராரூருள்ளாரளப்பூரார்அந்தணர்கள்பாடக்கோயி
லுண்ணாழிகையாருமையாளோடுமிமையோர்பெருமானாரொற்றியூரார்
பெண்ணாகடத்துப்பெருந்தூங்கானைமாடத்தார்கூடத்தார்பேராவூரார்
விண்ணோர்களெல்லாமவிரும்பியேத்தவீழிமிழலையேமேவினாரே. (௩)

வெண்காட்டார்செங்காட்டங்குடியார்வெண்ணிநன்னகரார்வேட்களத்
தார்வேதநாவர், பண்காட்டும்வண்டார்பழனத்துள்ளார்பராய்த்துறையார்சி
ராப்பள்ளியுள்ளார்பண்டோர், வெண்கோட்டுக்கருங்களிறதைப்பிளிறப்பற்றி

யுரித்ததுரிவைபோர்த்தவிடலைவேடம்,விண்காட்டும்பிறைநுதலியஞ்சக்காட்டி வீழிமிழலையேமேவினாரே. (௪)

புடைசூழ்ந்தபூதங்கள்வேதம்பாடப்புலியூர்ச்சிற்றம்பலத்தேநடமாடுவா, ருடைசூழ்ந்தபுலித்தோலர்கலிக்கச்சிமேற்றளியுளார்குளிர்சோலையேகம்பத்தார், கடைசூழ்ந்துபலிதேருங்கங்காளனார்கழுமலத்தார்செழுமலர்த்தாரர்க்குழலியோடும், விடைசூழ்ந்தவெல்கொடியார்மல்குசெல்வவீழிமிழலையேமேவினாரே. (௫)

பெரும்புலியூர்விரும்பினார்பெரும்பாழியார் பெரும்பற்றப்புலியூர்மூலத்தானத்தார், இரும்புதலாரிரும்பூளையுள்ளாரேராரின்னம்பராரீங்கோய்மலையாரின்சொற், கரும்பனையாளுமையோடுங்கருகாவூரார்கருப்பறியலூரார்கரவீரத்தார், விரும்பமரரிரவுபகல்பரவியேத்தவீழிமிழலையேமேவினாரே. (௬)

மறைக்காட்டார்வலிவலத்தார்வாய்மூர்மேயார்வாளொளிபுத்தூரார்மாகாளத்தார், கறைக்காட்டுங்கண்டனார்காபாலியார்கற்குடியார்விற்குடியார்கானப்பேரார், பறைக்காட்டுங்குழிவிழிகட்பல்பேய்சூழப்பழையனூராலங்காட்டடிகள்பண்டோர், மிறைக்காட்டுங்கொடுங்காலன்வீடப்பாய்ந்தார்வீழிமிழலையேமேவினாரே (௭)

அஞ்சைக்களத்துள்ளாரையாற்றுள்ளாராரூரார்பேரூரழுந்தூருள்ளார்
தஞ்சத்தளிக்குளத்தார்தக்களூரார்சாந்தையயவந்தீத்தார்தங்கினார்தாம்
நஞ்சைத்தமக்கமுதாவுண்டநம்பர்நாகேச்சரத்துள்ளார்நாரையூரார்
வெஞ்சொற்சமண்சிறையிலென்னைமீட்டார்வீழிமிழலையேமேவினாரே. (௮)

கொண்டலுள்ளார்கொண்டீச்சரத்தினுள்ளார் கோவலூர்வீரட்டங்கோயில்கொண்டார், தண்டலையார்தலையாலங் காட்டிலுள்ளார் தலைச்சங்கைப்பெருங்கோயில்தங்கினார்தாம், வண்டலொடுமண்ணற்கொணரும்பொன்னிநன்னீர்வலஞ்சுழிப்பால்வைகினமாடத்துள்ளார், வெண்டலைமான்கைக்கொண்டவிகிர்தவேடர்வீழிமிழலையேமேவினாரே. (௯)

அரிச்சந்திரத்துள்ளாரம்பருள்ளாரரிபிரமரிந்திரர்க்குமரியரானா [கி
புரிச்சந்திரத்துள்ளார்போகத்துள்ளார்பொருப்பரையன்மகளோடுவிருப்பரா
யெரிச்சந்திவேட்குமிடத்தாரேமகூடத்தார்பாடத்தேனிசையார்தீதா
விரிச்சங்கையெரிக்கொண்டங்காடும்வேடர்வீழிமிழலையேமேவினாரே. (௧௦)

புனக்கூரார்புறம்பயத்தார்புத்தூருள்ளார் பூவணத்தார்புலிவலத்தார்வலியின்மிக்க, தனக்கூர்மைகருதிவரையெடுக்கலுற்றான்றலைகளொடுமலைகளனைத்தாளுந்தோளும், பொன்கூருங்கழலடியோர்விரலாலூன்றிப்பொருப்பதின்கீழ்நெரித்தருள்செய்புவனநாதர், மின்கூருஞ்சடைமுடியார்விடையின்பாகர்வீழிமிழலையேமேவினாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவீழிமிழலை-திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

**கண்ணவன்காண்கண்ணொளிசேர் காட்சியான்காண் கந்தருவம்பாட்டிசையிற்காட்டுகின்ற, பண்ணவன்காண்பண்ணவற்றின்றிறலானான்காண்பழமா**

கிச்சுவையாகிப்பயக்கின்றான்காண், மண்ணவன்காண் தீயவன்காணீரானான்
காண் வந்தலைக்குமாருதன்காண் மழைமேகஞ்சேர், விண்ணவன்காண் விண்ண
வர்க்குமேலானான்காண் விண்ணிழிதண்வீழிமிழலையானே. (௧)

ஆலைப்படுகரும்பின்சாறுபோல வண்ணிக்குமஞ்செழுத்தினாமத்தான்கா
ண், சீலமுடையடியார்சிந்தையான்காண் திரிபுரமூன்றெரிபடுத்தசிலையினான்
காண், பாலினொடுதயிர்நறுநெய்யாடினான்காண் பண்டரங்கவேடன்காண் பலி
தேர்வான்காண், வேலைவிடமுண்டமிடற்றினான்காண் விண்ணிழிதண்வீழிமி
ழலையானே. (௨)

தண்மையொடுவெம்மைதானாகினான்காண் சக்கரம்புட்பாகற்கருள்செய்
தான்காண், கண்ணுமொருமூன்றுடையகாபாலிகாண் காமனுடல்வேவித்த
கண்ணினான்காண், எண்ணில்சமண்டேர்தம்மைத்தன்னையாட்கொண்டான்காணி
ருவர்க்கரியாயருளினான்காண், விண்ணவர்கள்போற்றவிருக்கின்றான்காண்
விண்ணிழிதண்வீழிமிழலையானே. (௩)

காதிசைந்தசங்கக்குழையினான்காண் கனகமலையன்னகாட்சியான்காண்,
மாதிசைந்தமாதவமுஞ்சோதித்தான்காண் வலமேலைவெள்ளெயிற்றுப்பரணத்
தான்காண், ஆதியன்காண் அண்டத்துக்கப்பாலான்காண் ஐந்தலைமாநாகநாணாக்கி
னான்காண், வேதியன்காண் வேதவிதிகாட்டினான்காண் விண்ணிழிதண்வீழிமி
ழலையானே. (௪)

நெய்யினொடுபாலிளநீராடினான்காணித்தன்மணவாளனெனநிற்கின்றான்
காண், கையின்மழுவாளொடுமானேந்தினான்காண் காலனுயிர்காலாற்கழிவித்
தான்காண், செய்யதிருமேனிவெண்ணீற்றினான்காண் செஞ்சடைமேல்வெ
ண்மதியஞ்சேர்த்தினான்காண், வெய்யகனல்விளையாட்டாடினான்காண் விண
ணிழிதண்வீழிமிழலையானே. (௫)

கண்டுஞ்சுங்கருநெடுமாலாழிவேண்டிக்கண்ணிடந்தருச்சிக்கக்கண்டருளு
வான்காண், வண்டினொடுமதுக்கொன்றைவன்னிமத்தமவானகங்கைசடைக்
கரந்தமாதேவன்காண், பண்டங்குமொழிமடவாள்பாகத்தான்காண் பரமன்
காண் பரமேட்டியாயினான்காண், வெண்டிங்களரவொடுசெஞ்சடைவைத்தா
ன்காண் விண்ணிழிதண்வீழிமிழலையானே. (௬)

கற்பொலிதோட்சலந்தரனைப்பிளந்தவாழி கருமாலுக்கருள்செய்தகரு
ணையான்காண், விற்பொலிதோள்விசயன்வலிதேய்வித்தான்காண் வேடுவனா
ய்ப்போர்பொருதுகாட்டினான்காண், தற்பரமாந்தற்பரமாய்நிற்கின்றான்காண்
சதாசிவன்காண் தன்னொப்பாரில்லாதான்காண், வெற்பரையன்பாவைவிருப்ப
ுளான்காண் விண்ணிழிதண்வீழிமிழலையானே. (௭)

மெய்த்தவன்காண் மெய்த்தவத்தினிற்பார்க்கெல்லாம்விருப்பிலாவிருப்பு
மன்வினையாக்கென்றும், பொய்த்தவன்காண் புத்தன்மறவாதோடியெறிசல்லி
புதுமலர்களாக்கினான்காண், உய்த்தவன்காணுயர்கதிக்கேயுள்கினாரையுலக
னைத்துமொளித்தளித்திட்டுய்யச்செய்யும், வித்தகன்காண் வித்தகர்தாம்விரு
ம்பியேத்தும் விண்ணிழிதண்வீழிமிழலையானே. (௮)

சந்திரனைத்திருவடியாற்றளர்வித்தான்காண் தக்கனையுமுனிந்தெச்சன்ற
லைகொண்டான்காண், இந்திரனைத்தோண்முறிவித்தருள்செய்தான்காணீச

னகாணேசன்காணிஊவோாகலெலா, மநதிரமுமறைபபொருளுமாயினுன்காணமாலொடயன்மேலொடுகீழறியாவணணம, வெநதழலினவிரிசுடராயோனகீளுனகாணவிணணிழிதணவீழிமிழலேயானே. (கூ)

ஈங்கைபபேரீமவனததிருக்கின்ருன்காணெமமான்காணகைமமாவினுரிபோாத்தான்சாண, ஓயகுமலேககரையன்றன்பாவையோடுமோருருவாய்நினருன்காணுங்காரனகாண, கோங்குமலாகொனறையநதாககணணியானகாணகொலலேறுவெலகொடிமேற்கூடடிஞனகாண, வேங்கைவரிபபுலித்தோனமேலாடையானகாணவிணணிழிதணவீழிமிழலேயானே. (கo)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவீழிமிழலே-திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம.

மானேறுகரமுடையவரதாபோலுமாலவனாகாலவஊவிலலாவஊததார்போலுங்,கானேறுகரிகதறவுரிததாாபோலுங்கடடஙககொடிதுடிகைககொணடாாபோலுந,தேனேறுதிருவிதழிததாராாபோலுநதிருவீழிமிழலேயமாசெலவாபோலும, ஆனேறதேறுமழகாபோலுமடியேஊயாளுடையவடிகடாமே.

சமரமிகுசலநதரனபோாவேணடிஞனசசககாத்தாறபிளபபிததசதுாாபோலும, நமஊயொருகாலகுறைத்தநாதாபோலுநாாணஊயிடபபாகததடைததாாபோலுங, குமரஊயுமகளுகவுடையாாபோலுஙகுளிாவீழிமிழலேயமாகுழகாபோலும, அமராகளபினமுதுணநஞசுணடாாபோலுமடியேஊயாளுடையவடிகடாமே. (உ)

நீறணிநததிருமேனிநிமலாபோலு நேமிநெடுமாற்கருளிசசெய்தாாபோலும, ஏறணிநதகொடியுடையெமமிறைவாபோலு மெயினமூனறுமெரிசாததாலெய்தாாபோலும, வேறணிநதகோலமுடைவேடாபோலுமவியனவிழிமிழலேயுறைவிகிாதாபோலும, ஆறணிநதசடாமகுடததழகாபோலுமடியேஊயாளுடையவடிகடாமே. (ங)

கைவேழமுகததவஊப்படைததாாபோலுங கயாசுரஊயவனுற்கொலவித்தாபோலுஞ, செய்வேளவிததககஊமுனசிதைததாாபோலுநதிசைமுகனறனசிரமொனறுசிதைததாாபோலு, மெய்வேள்விமூாததிதலேயறுததாாபோலுமவியனவீழிமிழலேயிடங்கொணடாாபோலும, ஐவேளவியாறஙகமாளுாபோலுமடியேஊயாளுடையவடிகடாமே. (ச)

துன்னததினகோவணமொனறுடையாாபோலுஞ்சுடர்மூனறுஞ்சோதியமாய்ததூயாாபோலும, பொனனுெதததிருமேனிபபுனிதாபோலுமபூதகணபபுடைசூழவருவாாபோலும, மினனுெததசெஞ்சடைவெணபிறையாாபோலுமவியனவீழிமிழலேசோவிமலாபோலும, அனனததேரயன்முடிசேரடிகள்போலுமடியேஊயாளுடையவடிகடாமே. (ரு)

மாலாலுமறிவரியவரதாபோலு மறவாதாாபிறபபறுக்கவலலார்போலும், நாலாயமறைக்கிறைவராளுாபோலுநாமவெழுத்தஞ்சாயநமபாபோலும, மேலாகைவீரியைமுனபடைததாாபோலுமவியனவீழிமிழலேயமாவிகிாதாபோலும, ஆலாலமிடற்றடக்கியளிததாாபோலுமடியேஊயாளுடையவடிகடாமே

பஞ்சடுத்தமெலவிரலாள் பங்காபோலும்பைநாகமரைக்கசைத்தபரமர் போலும, மஞசடுத்தமணிநீலகணடர்போலுமவடகயிலைமலையுடையமணளா போலுஞ், செஞசடைக்கண்வெணபிறைகொணடணிநதாரபோலுநதிருவீழி மிழலையமாசிவனார்போலும, அஞசடக்குமடியவாகட்கணியாரபோலுமடியே னையாளுடையவடிகடாமே (எ)

குணடரொடுபிரித்தெனையாட்கொண்டாரபோலுங்சூடமூக்கிலிட மாக்கி க்கொணடாரபோலும,புணடரிகபபுூமலராதனததாரபோலுமபுளளைசை க்கொனறுயிரபினகொடுததாரபோலும, வெணடலையிற்பலிகொணட விகிரதா போலுமவியனவீழிமிழலைநகருடையாரபோலு, மணடதுபபுறத்தபபாலாரு ரபோலுமடியேனையாளுடையவடிகடாமே (அ)

முததனையமுகிழ்முறுவலுடையாரபோலு மொய்பவளக் கொடியனைய சடையாரபோலும, எததனையுமபததிசெய்வாரக்கினியாரபோலுமிருநானகு மூாததிகளுமானாரபோலு, மித்திரவச்சிரவணறகுவிருபபாரபோலுமவியனவீழி மிழலையமா விகிதாபோலும,அத்தனெனுடுமம்மையெனக்சானாரபோலுமடியே னையாளுடையவடிகடாமே. (கூ)

கரியுரிசெய்துமைவெருவக்கண்டாரபோலுங்கஙகையையுஞசெஞசடை மேறகாநதாரபோலும, எரியதொருகைதரித்தவிறைவாபோலுமேனததினகூ னெயிறுபூணடாரபோலும, விரிகதிரோரிருவரைமுனவெகுணடாரபோலும் வியனவீழிமிழலையமாவிமலாபோலும், அரிபிரமாதுதிசெயநினறளிததாரபோ லுமடியேனையாளுடையவடிகடாமே. (க0)

கயிலாயமலையெடுத்தான்கதறிவீழககாவிரலாலடாததருளிச்செய்தார போலுங, குயிலாலுமெனமொழியாளகுளிாநதுநோககககூததாடவலலகுழ காபோலும, வெயிலாயசோதிவிளக்கானாரபோலுமவியனவீழிமிழலையமாவி கிாதாபோலும, அயிலாறுமூவிலைவேறபடையாரபோலுமடியேனையாளுடை யவடிகடாமே (கக)

திருச்சிற்றம்பலம.

ஆடி பதிகம் - ௫௩.

---

**திருப்புள்ளிருக்குவேளூர் - திருத்தாண்டகம்.**

திருச்சிற்றமபலம்.

ஆணடானையடியேனையாளாக்கொணடு வடியோடுமுடியயனமாலறியா வண்ண, நீணடானைநெடுங்களமாநகரானறன்னைநேமிவான்படையானீளுர வோனுகங், கீணடானைக்கேதாரமேவினானைக்கேடிலியைக்கிளாபொறிவாளர வோடெனபு, பூணடானைப்புளளிருககுவேளூரானைபபோற்றாதேயாற்றநாள் போக்கினேனே. (க)

சீரததானைச்சிறநதடியேன்சிநதையுள்ளேதிகழ்நதானைச்சிவனறனைத் தேவதேவைக், கூாததானைக்கொடுநெடுவேற்கூற்றநதன்னைக்குமைகழலாறகு மைத்துமுனிகொணடவச்சம, போத்தானைபபிறபபிலியையிறபபொன்றிலலா பபெமமானைகைகம்மாவினுரிவைபேணிப,போாததானைபபுள்ளிருக்குவேளூ ரானைபபோற்றாதேயாற்றநாள்போககினேனே. (உ)

பத்திமையாற்பணிந்தடியேனறனைப்பளுடபாமாலைபாடப்பயிலவித் தானை, எத்தேவுமேத்துமிறைவனறனையெமமானையெனனுள்ளத்துள்ளே

யூறும், அத்தேனையமுதத்தையாவின்பாலையண்ணிக்குந் தீங்கரும்பையரனை
யாதிப், புத்தேளைப்புள்ளிருக்குவேளூரானைப்போற்றாதேயாற்றநாள்போக்கி
னேனே (௩)

இருளாயவுள்ளத்தினிருளைநீக்கியிடர்ப்பாவங்கெடுத்தேழையேனையுய்
யத், தெருளாதசிந்தைதனைத்தெருட்டித்தன்போற்சிவலோகநெறியறியச்சிந்
தைதந்த, அருளானையாதிமாதவத்துளானை யாறங்கநால்வேதத்தப்பானின்
ற, பொருளானைப்புள்ளிருக்குவேளூரானைப் போற்றாதேயாற்றநாள்போக்கி
னேனே. (௪)

மின்னுருவைவிண்ணகத்திலொன்றாய்மிக்கு வீசுங்காற்றன்னகத்திலிரண்டா
யச்செந்தீத், தன்னுருவின்மூன்றாய்த்தாழ்புனலினான்காய்த்தரணிதலத்தஞ்
சாகியெஞ்சாத்தஞ்ச, மன்னுருவைவான்பவளக்கொழுந்தைமுத்தைவளரொ
ளியைவயிரத்தைமாசொன்றில்லாப், பொன்னுருவைப்புள்ளிருக்குவேளூ
ரானைப்போற்றாதேயாற்றநாள்போக்கினேனே. (௫)

அறையார்பொற்கழலார்ப்பவணியார்தில்லையம்பலத்துணடமாடுமழகன
றன்னைக், கறையார்மூவிலைநெடுவேற்கடவுடன்னைக்கடனாகைக்காரோணங்கரு
தினானை, யிறையானையென்னுள்ளத்துள்ளேவிள்ளாதிருந்தானையேழ்பொழி
லுந்தாங்கிநின்ற, பொறையானைப்புள்ளிருக்குவேளூரானைப்போற்றாதேயா
ற்றநாள்போக்கினேனே. (௬)

நெருப்பனையதிருமேனிவெண்ணீற்றானைநீங்காதென்னுள்ளத்தினுள்ளே
நின்ற, விருப்பவனைவேதியனைவேதவித்தைவெண்காடுமேவியனற்றுருத்திநகரு
மேவி, யிருப்பவனையிடைமருதோடீங்கோய்நீங்காவிறையவனையெனையாளுங்
கயிலையென்னும், பொருப்பவனைப்புள்ளிருக்குவேளூரானைப்போற்றாதேயா
ற்றநாள்போக்கினேனே (௭)

பேராயிரம்பரவிவானோரேத்தும்பெம்மானைப் பிரிவிலாவடியார்க்கெ
ன்றும், வாராதசெல்வம்வருவிப்பானை மந்திரமுந்தந்திரமுமருந்துமாகித், தீ
ராநோய்தீர்த்தருளவல்லான்றன்னைத் திரிபுரங்கடீயெழத்திண்சிலைகைக்கொ
ண்ட, போரானைப்புள்ளிருக்குவேளூரானைப் போற்றாதேயாற்றநாள்போக்கி
னேனே. (௮)

பண்ணியனைப்பைங்கொடியாள்பாகன்றன்னைப்படர்சடைமேற்புனல்கர
ந்தபடிறன்றன்னை, நண்ணியனையென்னாக்கித்தன்னானானை நான்மறையின்ற
பொருளைநளிவெண்டிங்கட், கண்ணியனைக்கடியநடைவிடையொன்றேறுங்
காரணனைநாரணனைக்கமலத்தோங்கும், புண்ணியனைப்புள்ளிருக்குவேளூரா
னைப்போற்றாதேயாற்றநாள்போக்கினேனே. (௯)

இறுத்தானையிலங்கையர்கோன்சிரங்கள்பத்து மெழுநரம்பி னின்னிசை
கேட்டின்புற்றானை, யறுத்தானையடியார்தமருநோய்பாவம்வலைகடலிலாலால
முண்டுகண்டங், கறுத்தானைக்கண்ணழலாற்காமனாகங்காய்ந்தானைக்கனன்
மழுவுங்கலையுமங்கை, பொறுத்தானைப்புள்ளிருக்குவேளூரானைப்போற்றாதே
யாற்றநாள்போக்கினேனே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

## ஸ்ரீகைலாயம் - போற்றித்திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

வேற்றாகிவிண்ணாகிநின்றாய்போற்றி மீளாமேயாளென்றுக்கொண்டாய்
போற்றி, யூற்றாகியுள்ளேயொளித்தாய்போற்றி யோவாதசத்தத்தொலியே

போற்றி, யாறாகியங்கேயமர்ந்தாய்போற்றியாறங்காலவேதமானாய்போற்றி, கா
ற்றாகியெங்குங்கலந்தாய்போற்றிகயிலைமலையானேபோற்றிபோற்றி. (க)

பிச்சாடலபேயோடுகந்தாய்போற்றிபிறவியறுக்கும்பிரானேபோற்றி
வைச்சாடனன்றுமகிழ்ந்தாய்போற்றிமருவியென்சிந்தைபுகுந்தாய்போற்றி
பொய்ச்சாபுரமூன்றுமெய்தாய்போற்றிபோகாதென்சிந்தைபுகுந்தாய்போற்றி
கச்சாகநாகமசைத்தாய்போற்றிகயிலைமலையானேபோற்றிபோற்றி. (உ)

மருவார்புரமூன்றுமெய்தாய்போற்றிமருவியென்சிந்தைபுகுந்தாய்போற்றி
யுருவாகியென்னைப்படைத்தாய்போற்றியுள்ளாவிவாங்கியொளித்தாய்போற்றி
திருவாகிநின்றதிறமேபோற்றிதேசம்பரவப்படுவாய்போற்றி
கருவாகியோடுமுகிலேபோற்றிகயிலைமலையானேபோற்றிபோற்றி. (௩)

வானத்தார்போற்றுமருந்தேபோற்றிவந்தென்றன்சிந்தைபுகுந்தாய்போற்றி
யூனத்தைநீக்குமுடலேபோற்றியோங்கியழலாய்நிமிர்ந்தாய்போற்றி
தேனத்தைவார்த்ததெளிவேபோற்றிதேவர்க்குந்தேவனாய்நின்றாய்போற்றி
கானத்தீயாடலுகந்தாய்போற்றிகயிலைமலையானேபோற்றிபோற்றி. (௪)

ஊராகிநின்றவுலகேபோற்றியோங்கியழலாய்நிமிர்ந்தாய்போற்றி
பேராகியெங்கும்பரந்தாய்போற்றிபெயராதென்சிந்தைபுகுந்தாய்போற்றி
நீராவியானநிழலேபோற்றிநேர்வாரொருவரையுமில்லாய்போற்றி
காராகிநின்றமுகிலேபோற்றிகயிலைமலையானேபோற்றிபோற்றி. (௫)

சில்லுருவாய்ச்சென்றுதிரண்டாய்போற்றிதேவரறியாததேவேபோற்றி
புல்லுயிர்க்கும்பூட்சிபுணர்ந்தாய்போற்றிபோகாதென்சிந்தைபுகுந்தாய்போற்றி
பல்லுயிராய்ப்பார்தோறுநின்றாய்போற்றிபற்றியுலகைவிடாதாய்போற்றி
கல்லுயிராய்நின்றகனலேபோற்றிகயிலைமலையானேபோற்றிபோற்றி. (௬)

பண்ணினிசையாகிநின்றாய்போற்றிபாவிப்பார்பாவமறுப்பாய்போற்றி
யெண்ணுமெழுத்துஞ்சொல்லானாய்போற்றியென்சிந்தைநீங்காவிறைவாபோற்
விண்ணுநிலனுந்தீயானாய்போற்றிமேலவர்க்குமேலாகிநின்றாய்போற்றி [றி
கண்ணின்மணியாகிநின்றாய்போற்றிகயிலைமலையானேபோற்றிபோற்றி. (௭)

 ரோதிருந்தாய்போற்றியென்சிந்தைநீங்காவிறைவாபோற்றி
யுமைபாகமாகத்தணைத்தாய்போற்றியூழியேழானவொருவாபோற்றி
யமையாவருநஞ்சமார்ந்தாய்போற்றியாதிபுராணனாய்நின்றாய்போற்றி
கமையாகிநின்றகனலேபோற்றிகயிலைமலையானேபோற்றிபோற்றி. (௮)

மூவாய்பிறவாயிறவாய்போற்றிமுன்னமேதோன்றிமுளைத்தாய்போற்றி
தேவாதிதேவர்தொழுந்தேவேபோற்றிசென்றேறியெங்கும்பரந்தாய்போற்றி
யாவர்க்குமடியேனுக்கெல்லாம்போற்றியல்லலறியவல்லதேன்போற்றி
காவாய்கனகத்திரளேபோற்றிகயிலைமலையானேபோற்றிபோற்றி. (௯)

நெடியவிசும்போடுகண்ணேபோற்றிநீளவகலமுடையாய்போற்றி
யடியுமுடியுமிகலிபோற்றியங்கொன்றறியாமைநின்றாய்போற்றி [ற்றி
கொடியவன்கூற்றமுதைத்தாய்போற்றிகோயிலாவென்சிந்தை கொண்டாய்போ
கடியவுருமொடுமின்னேபோற்றிகயிலைமலையானேபோற்றிபோற்றி. (௰)

உண்ணாதுறங்காதிருந்தாய்போற்றியோதாதே வேதமுணர்ந்தாயபோற்றி, எண்ணாவிலங்கைக்கோன்றன்னைப்போற்றி யிறைவிரலாலவைத்துகந்த விசா போற்றி, பண்ணாரிசையின்சொற் கேட்டாய்போற்றிபண்டேயென்சிந்தைபுகுந் தாய்போற்றி, கண்ணுயுலகுக்குநின்றாய்போற்றி கயிலைமலையானேபோற்றிபோ ற்றி. (கக)

திருச்சிற்றம்பலம்

## ஸ்ரீகைலாயம்-போற்றித்திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்.

பொறையுடையபூமிநீரானாய்போற்றிபூதப்படையாளபுனிதாபோற்றி
நிறையுடையநெஞ்சினிடையாய்போற்றி நீங்காதென்னுள்ளத்திருந்தாய்போற்றி
மறையுடையவேதமவிரித்தாய்போற்றிவானோர்வணங்கப்படுவாய்போற்றி
கறையுடையகண்டமுடையாய்போற்றிகயிலைமலையானேபோற்றிபோற்றி. (க)

முன்பாகிநின்றமுதலேபோற்றிமூவாதமேனிமுக்கண்ணாபோற்றி
அன்பாகிநின்றார்க்கணியாய்போற்றியாறேறுசென்னிச்சடையாய்போற்றி
என்பாகவெங்குமணிந்தாய்போற்றியென்சிந்தைநீங்காவிறைவாபோற்றி
கண்பாவிநின்றகனலேபோற்றிகயிலைமலையானேபோற்றிபோற்றி (உ)

மாலையெழுந்தமதியேபோற்றிமன்னியென்சிந்தையிருந்தாய்போற்றி
மேலைவினைகளறுப்பாயபோற்றிமேலாடுதிங்கட்முடியாயபோற்றி
ஆலைக்கரும்பின்றெளிவேபோற்றியடியார்கட்காரமுதமானாய்போற்றி
காலைமுளைத்தகதிரேபோற்றிகயிலைமலையானேபோற்றிபோற்றி (ந)

உடலின்வினைகளறுப்பாய்போற்றியொள்ளெரிவீசும்பிரானேபோற்றி
படருஞ்சடைமேன்மதியாய்போற்றிபல்கணக்கூத்தப்பிரானேபோற்றி
சுடரிற்றிகழ்கின்றசோதிபோற்றிதோன்றியென்னுள்ளத்திருந்தாய்போற்றி
கடலினொளியாயமுத்தேபோற்றிகயிலைமலையானேபோற்றிபோற்றி. (ச)

மைசேர்ந்தகண்டமுடையாயபோற்றிமாலுக்குமோராழியீந்தாய்போற்றி
பொய்சோந்தசிந்தைபுகுதாய்போற்றிபோகாதென்னுள்ளத்திருந்தாயபோற்றி
மெய்சேரப்பாலவெண்ணீறாடிபோற்றிமிக்கார்கள்ஏத்துமவிளக்கேபோற்றி
கைசேரனலேந்தியாடிபோற்றிகயிலைமலையானேபோற்றிபோற்றி (ரு)

ஆறேறுசென்னிமுடியாய்போற்றியடியார்கட்காரமுதாய்நின்றாய்போற்றி
நீறேறுமேனியுடையாய்போற்றிநீங்காதென்னுள்ளத்திருந்தாய்போற்றி
கூறேறுமங்கைமழுவாபோற்றிகொள்ளுங்கிழமையேழானாய்போற்றி
காறேறுகண்டமிடற்றாய்போற்றிகயிலைமலையானேபோற்றிபோற்றி. (சு)

அண்டமேழன்றுகடந்தாய்போற்றியாதிபுராணனாய்நின்றாய்போற்றி
பண்டைவினைகளறுப்பாய்போற்றிபாரோர்விண்ணேத்தப்படுவாய்போற்றி
தொண்டர்பாவுமிடத்தாய்போற்றிதொழிலேக்கியாளுஞ்சுடரேபோற்றி
கண்டங்கறுக்கவும்வல்லாய்போற்றிகயிலைமலையானேபோற்றிபோற்றி. (எ)

பெருகியலைகின்றவாறேபோற்றிபேராநோய்பேரவிடுப்பாய்போற்றி
உருகிநினைவார்தமருள்ளாய்போற்றியூனந்தவிர்க்கும்பிரானேபோற்றி
அருகிமிளிர்கின்றபொன்னேபோற்றியாருமிகழப்படாதாய்போற்றி
கருகிப்பொழிந்தோடுநீரேபோற்றிகயிலைமலையானேபோற்றிபோற்றி. (அ)

செய்யமலாமேலானகண்ணனபோறறி தேடியுணராமைநின்றுயபோற்றி, பொய்யாநஞ்சுண்டபொறையேபோறறி பொருளாகவென்னையாடகொண்டாய் போற்றி, மெய்யாகவானைஞ்சுகநதாயபோற்றிமிக்காாகளேத்துங்குணத்தாய்போறறி, கையானைமெய்த்தோலுரிததாய்போறறிகயிலைமலையானேபோறறிபோற்றி.

மேல்வைத்தவானோர்பெருமான்போறறிமேலாடுபுரமூன்று மெயதாய்போறறி, சீலத்தானதென்னிலங்கைமன்னன்போறறிசிலையெடுக்கவாயலறவைத்தாய்போற்றி, கோலத்தாறகுறைவிலலான்றனனையன்று கொடிதாகக்காய்நதகுழகாபோறறி, காலநதாறகாலனைபுநகாய்நதாய்போற்றி கயிலைமலையானேபோறறி போறறி. (கo)

திருச்சிற்றம்பலம்

ஸ்ரீகைலாயத்திருமலை - போற்றித்திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

பாட்டானநல்லதொடையாய்போறறிபரிசையறியாமைநின்றாய்போறறி
சூட்டானதிஙகண்முடியாயபோறறிதூமாலைமததமணிநதாய்போறறி
ஆட்டானதஞ்சுமமாநதாயபோறறியடஙகாதபுரமெரியநக்காய்போறறி
காட்டானைமெயததோலுரிததாயபோறறிகயிலைமலையானேபோறறிபோறறி.

அதிராவினைகளறுபபாயபோறறிபாலசிழறகீழமாநதாய்போறறி
சதுராசதுாககுழையாய்போறறிசாமபன்மெய்பூசுநதலைவாபோற்றி
எதிராவுலகமமைபபாய்போற்றியென்றுமீளாவருள்செய்வாய்போற்றி
கதிராாகதிருகணோாகண்ணேபோறறிகயிலைமலையானேபோற்றிபோற்றி. (உ)

செயயாய்கரியாயவெளியாயபோறறிசொலலாதசெலவமுடையாய்போறறி
ஐயாய்பெரியாய்சிறியாயபோறறியாகாசவண்ணமுடையாய்போறறி
வெய்யாய்தணியாயணியாய்போறறிவேளாதவேள்வியுடையாய்போற்றி
கையாாகழலாாவிடஙகாபோற்றிகயிலைமலையானேபோறறிபோறறி. (ங)

ஆடசியுலகையுடையாய்போறறியடியாாககமுதெலாமீவாய்போறறி
சூட்சிசிறிதுமிலாதாய்போறறிசூழ்நதகடனஞ்சமுண்டாய்போறறி
மாட்சிபெரிதுமுடையாய்போறறிமன்னியென்சிநதைமகிழ்நதாய்போற்றி
காட்சிபெரிதுமரியாய்போற்றிகயிலைமலையானேபோற்றிபோற்றி. (ச)

முன்னியாய்நின்றமுதல்வாபோறறிமூவாதமேனியுடையாய்போற்றி
என்னியாயெநதைபிரானேபோறறியேழினிசையேயுகபபாய்போற்றி
மன்னியமங்கைமணாளாபோறறிமநதிரமுநதநதிரமுமானாய்போற்றி
கன்னியாாகங்கைத்தலைவாபோறறிகயிலைமலையானேபோற்றிபோற்றி. (ரு)

உரியாயுலகினுக்கெலலாமபோறறியுணர்வென்னுமூாவதுடையாய்போற்றி
எரியாயதெய்வச்சுடரோபோறறியேசுமாமுண்டியுடையாய்போற்றி
அரியாயமராகட்கெல்லாமபோற்றியறிவேயடக்கமுடையாய்போற்றி
கரியானுக்காழியன்றீநதாய்போற்றிகயிலைமலையானேபோற்றிபோற்றி. (சு)

எண்மேலுமெண்ணமுடையாய்போற்றியேறறியவேறுங்குணத்தாய்போற்றி
பண்மேலேபாவித்திருநதாயபோறறிபண்ணொடியாழவீணைபயின்றாய்போறறி

விண்மேலுமேலுநிமிர்ந்தாய்போற்றிமேலாகண்மேலாகண்மேலாய்போற்றி
கண்மேலுங்கணணொன்றுடையாய்போற்றிகயிலைமலையானேபோற்றிபோற்றி. ()

முடியாசடையின்மதியாய்போற்றிமுழுநீறுசணணித்தழாத்திபோற்றி
துடியாரிடையுமையாள்பங்காபோற்றிசோதித்தார்காணுமைநின்றாய்போற்றி
அடியாரடிமையறிவாய்போற்றிய மராபதியாளவைத்தாய்போற்றி
கடியாடபுரமூன்றுமெய்தாய்போற்றிகயிலைமலையானேபோற்றிபோற்றி (அ)

போற்றிசைத்துன்னடிபரவநின்றாய்போற்றிபுண்ணியனேநண்ணலரியாய் போற்றி, ஏற்றிசைக்கும்வான்மேலிருந்தாய்போற்றி யெண்ணுயிரநூறுபேராய் போற்றி, நாற்றிசைக்கும்விளக்காயநாதாபோற்றி நான்முகநகுமாறகுமரியாப் போற்றி, காற்றிசைக்குநிசைக்கெல்லாமவித்தேபோற்றிகயிலைமலையானேபோ ற்றிபோற்றி. (கூ-கo.)

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் கைலாயநாதர்-தேவியார்-பார்வதியம்மை.

### திருவலம்புரம் - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

மண்ணளாந்தமணிவண்ணா தாமுமற்றைமறையவனும வானவருஞ்சூழநின் று, கண்மலிந்ததிருநெற்றியுடையாரொற்றைக் கதநாகங்கையுடையாகாணீரன் றே, பண்மலிந்தமொழியவருமியானுமெல்லாமபணிந்திறைஞ்சித்தமமுடையபி ன்பின்செல்ல. மண்மலிந்தவயல்புடைசூழ்மாடவீதிவலமபுரமேபுக்கங்கேமன் னினாரே. (க)

சிலைநவின்றதொருகணையாற் புரமூன்றெய்த தீவண்ணாசிறந்திமையோரி றைஞ்சியேத்தக், கொலைநவின்றகளியானையுரிவைபோர்த்துக்கூத்தாடித்திரிதரு மக்கூத்தாநல்ல, கலைநவின்றமறையவர்கள்காணக்காணக்கடுவிடைமேற்பாரிடங் கள்சூழக்காதன், மலைமகளுங்கங்கையுந்தாமுமெல்லாமவலமபுரமேபுக்கங்கேம ன்னினாரே. (உ)

தீக்கூருந்திருமேனியொருபான்மற்றை யொருபாலுமரியுருவந்திகழ்ந்தசெ ல்வா, ஆக்கூரிற்றான்றோன்றிபுகுவாரபோல வருவினையேன்செலவதுமேயப்பா லெங்கு, நோக்காரொருவிடத்துநூலுந்தோலுந்துதைந்திலங்குந்திருமேனி வெ ண்ணீற்றடி,வாக்கான்மறைவிரித்துமாயமபேசிவலமபுரமேபுக்கங்கேமன்னினாரே.

மூவாதமூக்கப்பாமபணையிற்சாத்திமூவருருவாயமுதலவரிந்நாட்,கோவாதவெரிக ணையைச்சிலைமேற்கோத்தகுழகனாகுளிரகொன்றைசூடியிங்கே, போவாரைக்க ண்டடியேன்பின்பின்செல்லப்புறக்கணித்துத்தம்முடையபூதஞ்சூழ,வாவாவெ னவுரைத்துமாயமபேசிவலம்புரமேபுக்கங்கேமன்னினாரே. (ச)

அனலொருகையதுவேந்தியதளினோடேயைந்தலையமா நாகமரையிற்சாத் திப், புனல்பொதிந்தசடைக்கற்றைப்பொன்போன்மேனிப்புனிதனார்புரிந்தமரரி றைஞ்சியேத்தச்,சினவிடையைமேலகொண்டுதிருவாரூருஞ்சிரபுரமுமிடைமரு துஞ்சேரவாரபோல, மனமுருகவளைகழலமாயமபேசிவலம்புரமேபுக்கங்கேமன் னினாரே. (ரு)

கறுத்ததொருகண்டத்தாகாலன்வீழக்காலினாற்காய்ந்துகந்தகாபாலியார்,முறித்ததொருதோலுடுத்துமுண்டஞ்சாத்திமுனிகணங்கள்புடைசூழமுற்றந்தோறுந், தெறித்ததொருவீணையராய்ச்செல்வார்தம்வாய்ச்சிறுமுறுவல்வந்தெனதுசிந்தைவௌவ, மறித்தொருகானோக்காதேமாயம பேசிவலம்புரமேபுக்கங்கேமன்னினாரே. (௬)

பட்டுடுத்துப்பவளம்போலமேனியெல்லாம்பசுஞ்சாந்தங்கொண்டணிந்துபாதநோவ, இட்டெடுத்துநடமாடியிங்கேவந்தாரகெவ்வூரீரெம்பெருமானென்றேனாவி, விட்டிடுமாறதுசெய்துவிரைந்துநோக்கிவேறோர்பதிபுகப்போவார்போல, வட்டணைகள்படநடந்துமாயம்பேசிவலம்புரமேபுக்கங்கேமன்னினாரே. (எ)

பல்லார்பயில்பழனம்பாசூரென்றும்பழனம்பதிபழமைசொல்லிநின்றார்
நல்லார்நனிபள்ளியின்றுவைகிநாளைப்போய்நள்ளாறுசேர்துமென்றார்
சொல்லாரொருவிடமாதேதோள்கைவீசிச்சுந்தரராயவெந்தநீறாடியெங்கும்
மல்லார்வயல்புடைசூழ்மாடவீதிவலம்புரமேபுக்கங்கேமன்னினாரே. (அ)

பொங்காடரவொன்றுகையிற்கொண்டுபோர்வெண்மழுவேந்திப்போகாநிற்பார், தங்காரொருவிடத்துந்தம்மேலார்வந் தவிர்த்தருளாய்தத்துவதேதேநின்றேனென்பார், எங்கேயிவர்செய்கையொன்றொன்றொவ்வாவெனகண்ணினின்றகலாவேடங்காட்டி, மங்குன்மதிதவழுமாட வீதிவலம்புரமேபுக்கங்கேமன்னினாரே. ()

செங்கண்மால்சிலைபிடித்துச்சேனையோடுஞ்சேதுபந்தனஞ்செய்துசென்றுபுக்குப், பொங்குபோர்பலசெய்துபுகலால்வென்றபோரரக்கனெடுமுடிகள்பொடியாய்வீழ, அங்கொருதன்றிருவிரலாலிறையேயூன்றியடர்த்தவற்கேயருள்புரிந்தவடிகளிந்நாள், வங்கமலிகடல்புடைசூழ்மாடவீதிவலம்புரமேபுக்கங்கேமன்னினாரே. (௧0)

ஆ பதிகம்-௫அ. திருச்சிற்றம்பலம்,

---

**திருவெண்ணி - திருத்தாண்டகம்.**

திருச்சிற்றம்பலம்.

தொண்டிலங்குமடியவர்க்கோர்நெறியினாருந்தூநீறுதுதைந்திலங்குமார்பினாரும், புண்டரிகத்தயனொடுமாலகாணாவண்ணம்பொங்குதழற்பிழம்பாயபுராணனாரும், வண்டமருமலர்க்கொன்றைமாலையாரும்வானவர்க்காநஞ்சுண்டமைந்தனாரும், விண்டலர்தம்புரமூன்றுமெரிசெய்தாரும்வெண்ணியமர்ந்துறைகின்றவிகிர்தனாரே. (௧)

நெருப்பனையமேனிமேல்வெண்ணீற்றாருநெற்றிமேலொற்றைக்கண்ணிறைவைத்தாரும், பொருப்பரையன்மடப்பாவையிடப்பாலாரும்பூந்துருத்திநகாமேயபுராணனாரு, மருப்பனையவெண்மதியக்கண்ணியாரும்வளைகுளமுமறைக்காடுமன்னினாரும்,விருப்புடையவடியவர்தம்முள்ளத்தாரும்வெண்ணியமர்ந்துறைகின்றவிகிர்தனாரே. (௨)

கையுலாமூவிலைவேலேந்தினாருங்கரிகாட்டிலெரியாடுங்கடவுளாரும், பையுலாநாகங்கொண்டாட்டுவாரும்பரவுவார்பாவங்கள்பாற்றுவாரும், செய்யுலாங்கயல்பாயவயல்கள்சூழ்ந்ததிருப்புன்கூர்மேவியசெல்வனாரு,மெய்யெலாம்வெண்ணீறுசண்ணித்தாரும்வெண்ணியமர்ந்துறைகின்றவிகிர்தனாரே. (௩)

சடையேறுபுனலமைத்தசதுரனாருந்தக்கன்றனபெருவேள்விதடைசெய்தாரும, உடையேறுபுலியதள்மேனகங்கடடியுண்பலிக்கென் றூரூரினுழிதாவாரும, விடையேறிக்கயல்பாயவயலகள்சூழ்ந்தமயிலாடுதுறையுறையுமணாளனாரும, விடையேறுவெலகொடியெமவிமலனாருமவெண்ணி யமாநதுறைகின்றவிகிர்தனாரே. (ச)

மணணிலங்குநீரனலகாலவானுமாகிமற்றவற்றின குணமெலாமாய்நின்றாரும,பண்ணிலங்குபாட லோடாடலாருமபருப்பதமுமபாசூருமன் னினாருங், கண்ணிலங்குநுதலாருங்கபாலமேந்திக் கடைதோறுமபலிகொளளுஙகாடசியாரும, விண்ணிலங்குவெண்மதியக்கண்ணியாரும வெண்ணியமாநதுறைகின்றவிகிர்தனாரே. (ரு)

வீடுதனைமெய்படியார்க்கருள்செய்வாருமவேலைவிடமுண்டிருண்டகண்டத்தாருங், கூடலாதமழுவெயிலுமெரிசெய்தாருஙகுளாகழலாற கூற்றுவனைக்குமைசெய்தாரும, ஆடுமரவளைக்கசைத்தங்காடுவாருமாலமரநீழலிருந்தறஞ்சொன்னாரும, வேடுவனாய்மேலவிசயற்கருள்செய்தாருமவெண்ணியமாநதுறைகின்றவிகிர்தனாரே. (சா)

மட்டிலங்குகொனறையநதாமாலைசூடிமடவாளவளோடுமானேறேநதிச், சிட்டிலங்குவேடத்தராகிநாளுஞ்சில்பலிக்கென் றூரூர்திரிதாவாருங்,கட்டிலங்குபாசத்தாலவீசவநதகாலன்றன்காலமறுபபார்தாமும, விட்டிலங்குவெண்குழைசேர்காதினாருமவெண்ணியமர்நதுறைகின்றவிகிர்தனாரே (எ)

செஞ்சடைக்கோவெண்டிங்கள்சூடினாருந்திருவாலவாயுறையுஞ்செலவனாரும்
அஞ்சனக்கணரிவையொருபாகத்தாருமாறங்கநாலவேதமாய்நின்றாரு
மஞ்சடுத்தநீள்சோலைமாடவீதிமதிலாரூர்புக்கங்கேமன்னினாரும
வெஞ்சினத்தவேழமதுவுரிசெய்தாருமவெண்ணியமாந்துறைகின்றவிகிர்தனாரே.

வளங்கிளர்மாமதிசூடுமவேணியாருமவானவாக்காய்நஞ்சுண்டமைந்தனாருங், களங்கொளவென்சிந்தையுள்ளேமன்னினாருங் கச்சியேகமபத்தெங்கடவுளாரும, உளங்குளிரவமுதூறியண்ணிபபாருமுத்தமராயெத்திசையுமன்னினாரும, விளங்கிளரும்வெண்மழுவொன்றேந்தினாரும் வெண்ணியமாந்துறைகின்றவிகிர்தனாரே. (கூ)

பொன்னிலங்குகொன்றையநதார்மாலைசூடிப் புகலூருமபூவணமும்பொருந்தினாருங்,கொன்னிலங்குமூவிலைவேலேநதினாருங்குளிரார்ந்தசெஞ்சடையெங்குழகனாருங், தென்னிலங்கைமன்னவாகோன்சிரங்கள்பத்துந்திருவிரலாலடர்த்தவனுக்கருள்செய்தாரு, மின்னிலங்குநுண்ணிடையாள்பாகத்தாருமவெண்ணியமர்ந்துறைகின்றவிகிர்தனாரே. (கo)

திருச்சிற்றம்பலம்.

இந்தத்தலம் சோழநாட்டிலுள்ளது.
சுவாமிபெயர்-வெண்ணிநாயகர்-தேவியார்-அழகியநாயகியம்மை.

---

## திருக்கற்குடி - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

மூத்தவனைவானவர்க்குமூவாமேனிமுதலவனைத்திருவளாயின் மூக்கப்பாமபொன், மூர்த்தவனையக்கரவமாரமாகவணிநதவனைபபணிநதடியாரடைந்தவன்

போ, டேததவனையிறுவனாயிறறேனையேனோக்கின்னமுதமளித்தவனையிடனை யெலலாங், காத்தவனைக்கற்குடியிலவிழுமியானைக்கறபகததைக்கண்ணுரக்கண் டேனுனே. (க)

செய்யானைவெளியானைக்கரியான்றன்னைத்திசைமுகனைத்திசையெட்டுஞ் செறிநதான்றன்னை, ஐயானைநெய்யானைச்சீரியானையணியானைச்சேயானையான ஞ்சாடு, மெய்யானைபபொய்யாதுமிலாதான்றன்னைவிடையானைச்சடையானை வெறித்தமானகொள, கையானைக்கற்குடியிலவிழுமியானைக்கறபகத்தைக்கண்ணு ரக்கண்டேனுனே (உ)

மணணதனிலைநதைமாநீரினுன்கைவயங்கெரியின்மூன்றைமாருதத்திரண் டை, விண்ணதனிலொன்றைவிரிகதிரைநதணமதியைத்தாரகைகடமமின்மிக்க, எண்ணதனிலெழுத்தைதயேழிசையைக் காமனெழிலழியவெரியுமிழ்நத விமை யாநெறறிக்,கண்ணவனைக்கறகுடியில்விழுமியானைக்கற்பகத்தைக்கண்ணுரக்கண் டேனுனே. (ஙூ)

நற்றவனைபபுறறரவநாணினுனைநாணுதுநகுதலையூணயநதான்றன்னை முறறவனைமூவாதமேனியானைமுநநீரினஞ்சமுகநதுண்டான்றன்னைப பறறவனைபபறறாதமபதிகள்செறறபடையானையடைவாரதமபாவமபோக்கக் கறறவனைக்கறகுடியிலவிழுமியானைக்கறபகததைதககண்ணுரககண்டேனுனே. ()

சஙகைததனைததவிரததாண்டதலைவன்றன்னைச் சங்கரனைத்தழலுறுதாண் மழுவாடாஙகும,அஙகையனைபஙகமணி யாகத்தானை யாகததோரபாகததேயமர வைத்த, மஙகையனைமதியொடுமாசுணமுநதமமின்மருவவிரிசடைமுடிமேல வைததவானீரக், கஙகையனைக்கற்குடியில்விழுமியானைக்கற்பகததைதக்கணணு க்கண்டேனுனே (ருே)

பெண்ணவனையாணவனைபபேடானுனைப பிறபபிலியையிறபபிலியைபபே ராவாணி, விண்ணவனைவிண்ணவாக்குமேலானுனைவேதியனைவேதததின்கீதம பாடும, பண்ணவனைபபண்ணிலவருபயனுனைபபாரவனைபபாரிலவாழுயிராகட் கெலலாங, கண்ணவனைககறகுடியிலவிழுமியானைக்கறபகததைக்கண்ணுரக்கண் டேனுனே. (சா)

பண்டானைபபாரநதானைக்குவிநதான்றன்னைபபாரானைவிண்ணுயிவ்வுலகமெ ல்லாம.உண்டானையுமிழ்நதானையுடையான்றன்னையொருவருநதன்பெருமைத னையறியவொண்ணு, விண்டானைவிண்டாரதம்புரஙகண்மூன்றுமவெவ்வழலில வெநதுபொடியாகிவீழக், கண்டானைக்கற்குடியிலவிழுமியானைக்கற்பகத்தைக்க ண்ணுரக்கண்டேனுனே. (எ)

வானவனைவானவாக்குமேலானுனை வணங்குமடியார்மனத்துண்மருவிடபு க்க, தேனவனைத்தேவர்தொழுகழலான்றன்னைச் செய்குணங்கள் பலவாகிநின்ற வென்றிக், கோனவனைக்கொல்லைவிடையேற்றினுனைக்குழன்முழவமியம்பக்கூ த்தாடவலல, கானவனைக்கற்குடியில்விழுமியானைக்கற்பகத்தைக்கண்ணுரக்கண் டேனுனே. (அ)

கொலையானையுரிபோர்த்தகொள்கையானைக்கோளரியைக்கூரம்பாவனைமே ற்கோத்த, சிலையானைச்செம்மைதருபொருளான்றன்னைத்திரிபுரத்தோர்மூவர்க்

குச்செமமைசெய்த, தலைபாவைத்தத்துவங்களானுன்றன்னைத்தையலோபங்கி னனைத்தன்கையேகது, கலையானைக்கற்குடியில்விழுமியானைக்கற்பகத்தைக்கண் ணாரக்கண்டேனுனே. (கூ)

பொழிலானைப்பொழிலாருமபுன்கூரானைப புறம்பயனையறமபுரிந்தபுகலூ ரானை, எழிலானையிடைமருதினிடங்கொண்டானை யீங்கோய்நீங்காதுறையுமி றைவன்றன்னை, அழலாடுமேனியனையன்றுசென்று குன்றெடுததவரக்கன்ரு ணெரியவூன்றுங், கழலானைக்கற்குடியிலவிழுமியானைக்கற்பகத்தைக்கண்ணாரக் கண்டேனுனே. (க0)

திருச்சிற்றம்பலம்.

இநதத்தலம் சோழநாட்டிலுள்ளது.
சுவாமிபெயா - முததீசர் - தேவியாா - அஞசனுக்ஷியம்மை.

---

## திருக்கன்றப்பூர் - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

மாதினையோாகூறுகநதாய்மறைகொணுவா மதிசூடிவானவாகடங்கட்கெல் லா, நாதனேயென்றென்றுபரவிநாளுநைநதுருகிவஞ்சகமற்றன்புகூாநது, வாத னையான்றுபபொழுதுமபூநீாகொண்டுவைகல்மறவாதுவாழ்த்தியேததிக், காதன் மையாற்ருெழுமடியாாநெஞ்சினுள்ளேகன்ருபபூாநடுதறியைக்காணலாமே. ()

விடிவதுமேவெண்ணீற்றைமெய்யிற்பூசிவெளுத்தமைநதகீளொடுகோவண முந்தற்றுச், செடியுடையவலவினைநோய்தீாபபாயென்றுஞ்செலகதிக்குவழிகா ட்டுஞ்சிவனேயென்றுந, துடியனையவிடைமடவாள்பஙகாவென்றுஞ்சுடலைதனி னடமாடுஞ்சோதியென்றுந, கடிமலர்தூய்தொழுமடியாாநெஞ்சினுள்ளேகன் ருப்பூர்நடுதறியைக்காணலாமே. (உ)

எவரேனுநதாமாகவிலாடத்திடடதிருநீறுஞ்சாதனமுங்கண்டாலுள்கி, உவ ராதேயவரவரைக்கண்டபோதுஉகநதடிமைத்திறநினைநதங்குவநதுநோககி, யிவா தேவரவாதேவரொன்றுசொலலியிரண்டாடடாதொழிநதீசனதிறமேபேணிக், க வராதேதொழுமடியார்நெஞ்சினுள்ளேகன்ருபபூாநடுதறியைக்காணலாமே. (ந)

இலங்காலஞ்செல்லாநாளென்றுநெஞ்சத்திடையாதேயாவாக்குமபிச்சையி ட்டு, விலங்காதேநெறிநின்றங்கறிவேமிக்குமெய்யன்புபுகபபெய்துபொய்யைநீக் கித், துலங்காமெய்வானவரைக்காததுநஞ்ச முண்டபிரானடியிணைக்கேசித்தம வைத்துக், கலங்காதேதொழுமடியாாநெஞ்சினுள்ளேகன்ருபபூாநடுதறியைக்கா ணலாமே. (ச)

விருத்தனேவேலைவிடமுண்டகண்டாவிரிசடைமேலவெண்டிங்கள்விளங்க ச்சூடு,மொருத்தனேயுமைகணவாவுலகமூாததிநுநதாதவொணசுடரோயடியாாதங் கள், பொருத்தனேயென்றென்றுபுலமபிநாளுமபுலனைநதுமகத்தடக்கிப்புலமபி நோக்கிக், கருத்தினுற்ருெழுமடியார்நெஞ்சினுள்ளேகன்ருப்பூாநடுதறியைக்காண லாமே. (ரு)

பொசியினுன்மிடைநதுபுழுபபொதிநதபோாவைப பொல்லாதபுலாலுடம் பைநிலாசுமென்று, பசியினுன்மீதூரப்பட்டேயீட்டிபபலர்க்குதவலதுவொழிந துபவளவாயார், வசியினுலகப்பட்டுவீழாமுன்னமவானவாகோன்திருநாமமஞ்சு ஞ்சொல்லிக், கசிவினுற்ருெழுமடியார்நெஞ்சினுள்ளேகன்ருப்பூர்நடுதறியைக் காணலாமே. (சு)

ஐயினன்மிடறடைப்புண்டாக்கைவிட்டுஆவியார்போவதுமேயகத்தார்கூடி
மையினாற்கண்ணெழுதிமாலைசூட்டிமயானத்திலிடுவதன்முன்மதியஞ்சூடும்
ஐயனார்க்காளாகியன்புமிக்குஅகங்குழைந்துமெய்யரும்பியடிகள்பாதங்
கையினாற்றொழுமடியார்நெஞ்சினுள்ளேகன்றாப்பூர்நடுதறியைக்காணலாமே. ( )

திருதிமையாலைவரையுங்காவலேவித் திகையாதேசிவாயநமவென்னுஞ்சிந்தைச்
சுருதிதனைத்துயக்கறுத்துத்துன்பவெள்ளக்கடனீந்திக்கரையேறுங் கருத்தேமிக்
பருதிதனைப்பற்பறித்தபாவநாசாபரஞ்சுடரேயென்றென்று பரவிநாளுங் [குப
கருதிமிகத்தொழுமடியார்நெஞ்சினுள்ளேகன்றாப்பூர்நடுதறியைக்காணலாமே ( )

குனிந்தசிலையாற்புரமூன்றெரித்தாயென்றுங் கூற்றுதைத்தகுரைகழற்சேவடியாயென்றுந், தனஞ்சயற்குப்பாசுபதமீந்தாயென்றுந் தசக்கிரிவன்மலையெடுக்கவிரலாலூன்றி, முனிந்தவன்றன்சிரம்பத்துந்தாளுந்தோளுமுரணழித்திட்டருள்கொடுத்தமூர்த்தியென்றுங், கனிந்துமிகத்தொழுமடியார்நெஞ்சினுள்ளேகன்றாப்பூர்நடுதறியைக்காணலாமே. (கo)

திருச்சிற்றம்பலம்.

இந்தத்தலம் சோழநாட்டிலுள்ளது.
சுவாமிபெயர்-நடுதறிநாயகர்-தேவியார்-மாதுமைநாயகியம்மை.

---

### திருவானைக்கா - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

எத்தாயரெத்தந்தையெச்சுற்றத்தாரெம்மாடுசும்மாடாமேவார்நல்லார்,செத்தாலவந்துதவுவாரொருவரில்லைச்சிறுவிறகாற்றீமூட்டிச்செல்லாநிற்பர், சித்தாயவேடத்தாய்நீடுபொன்னித்திருவானைக்காவுடையசெல்வாவென்றன், அத்தாவுன்பொற்பாதமடையப்பெற்றாலல்லகண்டங்கொண்டடியேனென்செய்கேனே.

ஊனாகியுயிராகியதனுணின்றவுணர்வாகிப்பிறவனைத்துநீயாய்நின்றாய, நானேதுமறியாமேயென்னுள்வந்துநல்லனவுந்தீயனவுங்காட்டாநின்றாய், தேனாருங்கொன்றையனேநின்றியூராயதிருவானைக்காவிலுறைசிவனேஞானம,ஆனாயுன்பொற்பாதமடையப்பெற்றாலல்லகண்டங்கொண்டடியேனென்செய்கேனே.

ஒப்பாயிவ்வுலகத்தோடொட்டிவாழ்வா னொன்றலாத்தவத்தாரோடுடனேநின்று, துப்பாருங்குறையடிசிறுநறினைத்துனதிறமறந்துதிரிவேனைக்காத்துநீவந்து, எப்பாலுநுண்ணுணர்வேயாகியெனையாண்டவனேயெழிலானைக்காவாவானோ, அப்பாவுன்பொற்பாதமடையப்பெற்றாலல்லகண்டங்கொண்டடியேனென்செய்கேனே. (௩)

நினைத்தவாகநெஞ்சுளாய்வஞ்சக்கள்வாநிறைமதியஞ்சடைவைத்தாயடையாதுன்பால், முனைத்தவர்கள்புரமூன்றுமெரியச்செற்றாய் முன்னானைத்தோல்போர்த்தமுதல்வாவென்றுங், கனைத்துவருமெருதேறுங்காளகண்டா கயிலாயமலையாநின்கழலேசேர்ந்தேன், அனைத்துலகுமஆள்வானே யானைக்காவாவல்லகண்டங்கொண்டடியேனென்செய்கேனே. (௪)

இம்மாயப்பிறப்பென்னுங்கடலாந்துன்பத் திடைச்சுழிப்பட்டிளைப்பேனையிளையாவண்ணங், கைம்மானமனத்துதவிக்கருணைசெய்துகாதலருள்வைவைத்தாய்காணநில்லாய், வெம்மானமதகரியினுரிவைபோர்த்தவேதியனேதென்னு

னைக்காவுண்மேய, அம்மானின்பொற்பாதமடையப்பெற்றாலல்லகண்டங்கொண்டடியேனென்செய்கேனே. (௬)

உரையாரும்புகழானையொற்றியூராகச்சியேகம்பனைகாரோணத்தாய், விரையாருமலர்தூவிவணங்குவார்பான்மிக்கானையக்கரவமாரம்பூண்டாய், திரையாரும்புனற்பொன்னித்தீர்த்தமல்குதிருவானைக்காவிலுறைதேனேவானோ, அரையாவுன்பொற்பாதமடையப்பெற்றாலல்லகண்டங்கொண்டடியேனென்செய்கேனே. (௭)

மையாருமணிமிடற்றாய்மாதோர்கூறாய மானமறியுமாமழுவுமனலுமேந்து ங், கையானேகாலனுடலமாளச்செற்றகங்காளாமுன்கோளுமவிளைவுமானாய,செய்யானேதிருமேனியரியாய்தேவாகுலக்கொழுந்தேதென்னானைக்காவுண்மேய, ஐயாவுன்பொற்பாதமடையப்பெற்றாலல்லகண்டங்கொண்டடியேனென்செய்கேனே. (எ)

இலையாருஞ்சூலத்தாயெண்டோளானே யெவ்விடத்துநீயலாதில்லையென்று,தலையாரக்கும்பிட்டுத்தக்காரோதுந்தழன்மடுத்தமாமேருக்கையில்வைத்த, சிலையானேதிருவானைக்காவுண்மேயதீயாடீசிறுநோயானலிவுண்டுள்ளம், அலையாதேநின்னடிக்கேயடையப்பெற்றாலல்லகண்டங்கொண்டடியேனென்செய்கேனே. (அ)

விண்ணாரும்புனல்பொதிசெஞ்சடையாய்வேதநெறியானே யெறிகடலினஞ்சமுண்டாய, எண்ணாரும்புகழானேயுன்னையெம்மானென்றென்றேநாவினிலெப்பொழுதுநினைக, கண்ணாரக்கண்டிருக்கக்களித்தெப்போதுங்கடிபொழில்சூழ்தென்னானைக்காவுண்மேய அண்ணாநின்பொற்பாதமடையப்பெற்றாலல்லகண்டங்கொண்டடியேனென்செய்கேனே. (௯)

கொடியேயும்வெள்ளேற்றாய்கூளிபாடக்குறட்பூதங்கூத்தாடநீயுமாடி, வடிவேயுமங்கைதனைவைத்தமைந்தாமதிலானைக்காவுளாய்மாகாளத்தாய், படியேயுங்கடலிலங்கைக்கோமான்றன்னைப்பருமுடியுந்திரடோளுமடர்த்துகந்த, அடியேவந்தடைந்தடிமையாகப்பெற்றாலல்லகண்டங்கொண்டடியேனென்செய்கேனே (௧0)

திருச்சிற்றம்பலம்

---

### திருவானைக்கா - திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்

முன்னானைத்தோல்போர்த்தமூர்த்திதன்னைமூவாதசிந்தையேமனமேவாக்கே, தன்னானையாப்பண்ணியேறினானைச்சார்தற்கரியானைத்தாதைதன்னை என்னானைக்கன்றினையென்னீசன்றன்னையெறிநீர்த்திரையுகளுங்காவிரிசூழ் தென்னானைக்காவானைத்தேனைப்பாலைச்செழுநீர்த்திரளைச்சென்றாடினேனே. ()

மருந்தானைமந்திரிப்பாரமனத்துளானைவளர்மதியஞ்சடையானைமகிழ்ந்தென்னுள்ளத், திருந்தானையிறப்பிலியைப்பிறப்பிலானை யிமையவர்தம்பெருமானையுமையாளஞ்சக், கருந்தானமதகளிற்றினுரிபோர்த்தானைக்கனமழுவாட்படையானைப்பலிகொண்டேறூர், திரிந்தானைத்திருவானைக்காவுளானைச்செழுநீர்த்திரளைச்சென்றாடினேனே. (௨)

முற்றாதவெண்டிங்கட்கண்ணியானை முந்நீர்நஞ்சுண்டிமையோர்க்கமுதநல்கும்,உற்றானைப்பல்லுயிர்க்குந்துணையானானையோங்காரத்துட்பொருளையுலகமெ

ல்லாம, பெறறானை பின்னிரக்கஞ்செய்வான் றன்னை பிரானென்றுபோற்றாதா புரங்கண்மூன றுஞ, செறறானை ததிருவானைக்காவுளானைச்செழுநீாத்திரளைச்செ ன்றுடினேனே. (௩)

காராருமணிமிடற்றெமபெருமான றன்னை ககாதில்வெண குழையானைககம ழ்பூங்கொன்றைத, தாரானை புலிய தளிருடையானை த தானன றிவேறொன்றுமி லலாஞானட, பேரானை மணியாரமாாபினானை பிஞககனை த தையவநானபறைக ளபூண்ட, தோரானை த திருவானைககாவுளானை சசெழுநாத்திரளை சசென றுடினே னே. (௪)

பொய்யேதுமில்லா தமெயயன றனானை புண்ணியனை நண்ணாதாாபுாமெரிக [௫
எய்தானை சசெய் தவததினமிககான் றன்னையே றமருய பெருமானை பிடமானோ து கையானைக்கஙகாளவேட த தானை க கடடஙககம [illegible] யானை கசன ல்போல மேனிச செயயானை த திருவானை ககாவுளானை சசெழு [illegible] ரளை சசென [illegible] னே. (௫)

கலையானை பாசு [illegible] பாணியானை ககமா வயிர த திரளானை [illegible]
மலையானையென்றலையினுசசியானை [illegible] யானையானவு
நிலையானை வரியரவுநாணாககோதது [illegible]
சிலையானை த திருவானைககாவுளானை சசெழு [illegible] ளை சசென [illegible] னே. (௬)

ஆதியனை யெறி [illegible] ணியிடைையானைய [illegible] க்கறிவொண்ணாத பான் மிக்க, சோதியனை த தூ மறையினபொருள் [illegible] ருமபம நம லாககொன றைதெதான் ஞா லபூண்ட, வேதியனை பழமன [illegible] னை விளஙகுமலா யன்சிரங்களைநதிலொனறைச, செதிய [illegible] யானை [illegible] நீாததி ரளைச்செனறுடினேனே (௭)

மகிழ்நதானை ககசியேகமபன் றன்னை [illegible] நயாழுததியேத திப, புகழநதாளைபொன வுலகம ஆள [illegible] யானை புறங் காடடாடல், உகநதானை பிச்சையேயிச்சிப [illegible] ளேயென னுளளத்துள்ளே, திகழநதானை த திருவானைககாவு [illegible] நீாததிரளைசசென றுடினேனே (௮)

நசையானை நாலவேதத் தபபாலானை நலகுரவுநீப்பிணிநோயகாபபான்றன் னை, யிசையானை யெண்ணிறந்தகுணத தான் றன்னை யிடைமருதுமீங்கோயுநீஙசா தேறறின், மிசையானை விரிகடலுமண்ணுமவிண்ணுமிகுதீயுமபுனலெறிகாறறாகி யெடடுத, திசையானை த திருவானைககாவுளானைச்செழுநீாததிரளைசசென்றுடி னேனே. (௯)

பாாததானைக்காமனுடலபொடியாய்வீழப பண்டயன்மாலிருவர்க்குமறியா வண்ணஞ், சீாத்தானைச்செநதழலபோலுருவினானைத்தேவாகடமபெருமானைத் திறமுனதே, யாாத்தோடிமலையெடுத்தவிலங்கைவேநதனுண்மையெலாங்கெடு த்தவன்றனிடாபபோதே,தீாத்தானை த திருவானைக்காவுளானைச்செழுநீாததிரளை ச்செனறுடினேனே. (௰)

---

திருச்சிறறம்பலம்.

### திருவேகம்பம் - திருத்தாண்டகம்.

திருச்சிற்றமபலம்.

கூறறுவன்காண்கூறறுவனைக்குமைத்தகோன்காண்குவலையன்காண்குவல யத்தினீரானான்காண், காற்றவன்காண்கனலவன்காண்கலிக்குமின்காண்கனபவ

ளச்செமமேனிகலநதவெள்ளை,நீற்றவன்காணிலாவூருஞ்சென்னியான்காணிறையாநதபுனற்கங்கைநிமிர்சடைமேல், ஏற்றவன்காணெழிலாருமபொழிலாகசசியேகமபன்காணவனென்னெண்ணத்தானே. (க)

பாநதவன்காண்பலவுயிர்களாகியெங்குமபணிநதெழுவார் பாவமுமவினையுமபோகத்,தூநதவன்காண்டீமலரங்கண்ணியான்காண் டோற்றநிலையிறுதிபொருளாய்வநத, மருநதவன்காண்வையங்களபொறைதீாபபான்காண்மலாதூவிநினைநதெழுவாருள்ள நீங்காது, இருநதவன்காணெழிலாருமபொழிலாகச்சியேகமபன்காணவனென்னெண்ணததானே. (உ)

நீற்றவன்காணீராகித்தீயானான்காணிறைமழுவுநதமருகமுமெரியுங்கையிற், றேறறவன்காண்டோற்றக்கேடில்லாதான்காண் டுணையிலிகாண்டுணையென்றுதொழுவாருளளம, போறறவன்காண்புகழ்கடனைபபடைததான்றான்காண்பொறியரவும்விரிசடைமேறபுனலுங்கங்கை,ஏறறவனகாணெழிலாருமபொழிலாகசசியேகமபன்காணவனென்னெண்ணததானே. (௩)

தாயவன்காணுலகிறகுததன்னொபபிலலாத தததுவனகாண்மலைமங்கைபஙகாவென்பாா, வாயவன்காண்வருமபிறவிநோய்தீாபபான்காண்வானவாக்குநதானவாக்குமண்ணுளோாக்குஞ், சேயவன்காணினைவாாக்குச்சித்தமாாததிருவடியேயுள்கிநினைநதெழுவாருளளம, ஏயவன்காணெழிலாருமபொழிலாகசசியேகமபன்காணவனென்னெண்ணததானே. (௪)

அடுத்தானையுரிததானகாண். (௫)

அழிததவன்காணெயின்மூன்றுமயிலவாயமபாலையாறுமிடைமருதுமஆள்வான்றான்காண், பழிததவன்காணடையாரையடைவாாதங்களபறறவனகாண்புறறரவநாணினான்காண்,சுழித்தவன்காண்முடிக்கஙகையடியேபோறறுநதூயமாமுனிவாக்காடபாாமேனிற்க, இழிததவன்காணெழிலாருமபொழிலாகசசியேகமபன்காணவனென்னெண்ணததானே. (௬)

அசைநதவன்காணடமாடிப்பாடல பேணியழலவண்ணததில்லடியுமுடியுந்தேடப, பசைநதவன்காண்பேய்க்கணங்களபரவியேததும பான்மையன்காண்பாவிநினைநதெழுவாா்தமபாற்,கசிநதவனகாண்கரியினுரிபோாததான்றான்காண்கடலிலவிடமுண்டமராககமுதமீய, இசைநதவன்காணெழிலாருமபொழிலாகச்சியேகமபன்காணவனென்னெண்ணததானே. (௭)

முடிததவன்காண்வன்கூற்றைசசீறறதீயாலவலியாாதமபுரமூன்றுமவேவசசாபம, பிடிததவனகாணபிஞ்ஞகனுமவேடததான்காண் பிணையல்வெறிகமழ்கொன்றையரவுசென்னி, முடிததவன்காண்மூவிலைநலவேலினான்காண்முழங்கியுருமெனததோன்றுமழையாய்மின்னி, இடித்தவன்காணெழிலாருமபொழிலாகச்சியேகமபன்காணவனென்னெண்ணததானே. (௮)

வருநதான்காண்மனமுருகிநினையாதாாக்குவஞ்சன்காண்அஞ்செழுத்துநினைவாாக்கென்று, மருநதவன்காண்வான்பிணிகடீருமவண்ணமவானகமுமண்ணகமுமமற்றுமாகிப, பாநதவன்காண்படாசடையெட்டுடையான்றான்காண்பங்கயததோனறன்சிரத்தையோநதியூரு, ாிநதவன்காணெழிலாருமபொழிலாகச்சியேகமபன்காணவனென்னெண்ணததானே. (௯)

